

பிரபல சமையல் கலைஞர் திருமதி பிரமீளா லால் தமது விசேஷப் பக்குவ முறை ஒன்றை உங்களுக்கு உதவுகிறார்.




# பேகிங் பவுடர்

## உபயோகித்து நீங்கள் வாழைப்பழ ரொட்டி செய்து பார்த்திருக்கிறீர்களா?

### வீட்டிலே செய்த ரொட்டிக்கு பழத்தின் இன்சுவை!



கேக்குகள், பிஸ்கோத்துகள், பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் முதலியவற்றை அதி மென்மையாகத் தயாரிக்க உதவுகிறது ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவு உபயோகித்தாலே போதும். ரெக்ஸ் பேகிங் பவுடர் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப் பட்டது. பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ்.




பக்குவ முறை:
- 500 கி. சர்க்கரை
- 250 கி. வெண்ணெய்
- 6 பழுத்த வாழைப் பழம் பிசைந்தது
- 4 நன்கு கடைந்த முட்டைகள்
- 250 கி. கேக் மாவு
- 1 தேக்கரண்டி உப்பு
- 3 தேக்கரண்டி ரெக்ஸ் பேகிங் பவுடர்

1. சர்க்கரையையும் வெண்ணெயையும் ஒன்றாகப் பிசைந்து கொள்ளவும்.
2. வாழைப் பழங்களையும் முட்டைகளையும் சேர்த்துக் கலக்கவும்.
3. மாவு, உப்பு, ரெக்ஸ் பேகிங் பவுடர் மூன்றையும் ஒன்றாக மும்முறை சலித்துக்கொள்ளவும்.
4. வாழைப் பழக் கலவையை சலித்த மாவுடன் மெதுவாகக் கலக்கவும். அதிகமாகக் கலக்க வேண்டாம்.
5. கலவையை இரண்டு பவுண்டு ரொட்டி டின்களில் ஊற்றி 350° பா. சூட்டிலே 40-45 நிமிஷங்களுக்குச் சுடவும்.

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை சீட்டை ஆங்கிலம் / இந்தி / வங்காளம் / தமிழ் / தெலுங்கு / மலையாளம் / குஜராத்தி / மராத்தி / கன்னடத்தில் இலவசமாக அனுப்பி வைக்கவும்.

பெயர்.............................................

முகவரி.............................................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பி.ஆர்)

இது போல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின் வரும் இதழ்களைக் கவனித்துப் பாருங்கள்.

ங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்!

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீ நிவாஸ ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பி.ஆர்)



ஏகபோக விற்பனை ஏஜண்டுகள்,
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ்-1
மற்றும் அவர்களது கிளைகள்



பிரபல சமையல் கலைஞர் திருமதி பிரமீளா லால் தமது விசேஷப் பக்குவ முறை ஒன்றை உங்களுக்கு உதவுகிறார்.




# பேகிங் பவுடர்

## உபயோகித்து நீங்கள் வாழைப்பழ ரொட்டி செய்து பார்த்திருக்கிறீர்களா?

### வீட்டிலே செய்த ரொட்டிக்கு பழத்தின் இன்சுவை!



கேக்குகள், பிஸ்கோத்துகள், பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் முதலியவற்றை அதி மென்மையாகத் தயாரிக்க உதவுகிறது ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவு உபயோகித்தாலே போதும். ரெக்ஸ் பேகிங் பவுடர் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப் பட்டது. பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ்.




**பக்குவ முறை:**

- 500 கி. சர்க்கரை
- 250 கி. வெண்ணை
- 6 பழுத்த வாழைப் பழம் பிசைந்தது
- 4 நன்கு கடைந்த முட்டைகள்
- 250 கி. கேக் மாவு
- 1 தேக்கரண்டி உப்பு
- 3 தேக்கரண்டி ரெக்ஸ் பேகிங் பவுடர்

1. சர்க்கரையையும் வெண்ணையையும் ஒன்றாகப் பிசைந்து கொள்ளவும்.
2. வாழைப் பழங்களையும் முட்டைகளையும் சேர்த்துக் கலக்கவும்.
3. மாவு, உப்பு, ரெக்ஸ் பேகிங் பவுடர் மூன்றையும் ஒன்றாக மும்முறை சலித்துக்கொள்ளவும்.
4. வாழைப் பழக் கலவையை சலித்த மாவுடன் மெதுவாகக் கலக்கவும். அதிகமாகக் கலக்க வேண்டாம்.
5. கலவையை இரண்டு பவுண்டு ரொட்டி டின்களில் ஊற்றி 350 பா. சூட்டிலே 40-45 நிமிஷங்களுக்குச் சுடவும்.

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை செட்டை ஆங்கிலம் இந்தி / வங்காளம் / தமிழ்/ தெலுங்கு/மலையாளம்/குஜராத்தி மராத்தி/கன்னடத்தில் இலவசமாக அனுப்பி வைக்கவும்.

பெயர்..............................

முகவரி..............................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பிஆர்)

இது போல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை கிழ்விக்கலாம். பின் வரும் இதழ்களைக் கவனித்துப் பாருங்கள்.

உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்!

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட.**
ஸ்ரீ நிவாஸ ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பிஆர்)



ஏகபோக விற்பனை ஏஜண்டுகள்,
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ்-1
மற்றும் அவர்களது கிளைகள்

Bensons/1393

# கல்கி

## பொருளடக்கம்

சௌமிய, சித்திரை 8உ ☼ 1969 ஏப்ரல் 20உ



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே



நன்றாகப்
பாருங்கள்,
இது ஏணியல்ல!

டாக்டர், உங்கள் மருந்துகள்-
தான் என் வியாதிக்குக்
காரணம் என்று நிச்சயமாகத்
தெரிகிறது.

காங்கிரஸ்

மக்கள்

PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 28 □ இதழ் 38

# புது வழி காட்டட்டும்!

ஓரளவுக்கு மேல் வரி விகிதத்தை உயர்த்தினால் அதனால் சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானம் குறையத் தொடங்கும். செல்வந்தர்கள் மீதுள்ள வரிகளை ஓரளவுக்கு மேல் அதிகமாக்கினால் அவர்கள் சோர்வடைந்து, தமது முதலீடுகளைக் குறைத்துக் கொள்வர். இதன் நிகர விளைவாக, அவர்களிடமிருந்து சர்க்காருக்குக் கிடைக்கும் வரி வருமானம் குறையத் தொடங்கும். செல்வந்தர் மீது விதிக்கப்படும் நேரடி வரிகள் உச்சத்தை அடைந்து, சர்க்காரின் வருமானத்தைக் குறைக்கிற நிலை ஏற்பட்டு விட்டது என்று நிதி மந்திரி இலாகா புரிந்து கொண்டு விட்டது. எனவே இனி ஏழைகளைப் பாதிக்கும் மறைமுக வரிகளை உயர்த்துவார்கள்.

பெர்மிட் — லைசென்ஸ் முறையினால் தங்களுக்கு மட்டும் ஏகபோக்கியம் பெற விரும்பும் முதலாளிகளுக்கு இன்றைய சர்க்கார் உதவியாக இருக்கிறது. இத்தகைய பெர்மிட் — லைசென்ஸ்தாரர்களும், 'தங்களுக்கு இனி வரி விதிப்பதற்கில்லை; ஏதேனும் ஒரு விதத்தில் ஏழைகளுக்கான வரிகளை உயர்த்த வேண்டும்' என்று கூறுகின்றனர்.

ஏழைகள் உபயோகிக்கிற பண்டங்களின் மீது வரி விதித்தால், 'விலை உயர்வு' என்ற பெயரில் இந்த வரிச் சுமை மறைமுகமாக ஏழைகளின் மீதே தள்ளப்படுகிறது. ஏழை மக்கள் மீது நேரடியாக வரி விதிக்காமல், அவர்கள் உபயோகப் படுத்தும் பொருள்களின் மீது வரி விதித்து, அவர்களிடமிருந்து கஜானாவுக்கு வருமானம் பெறுவது சர்க்காருக்குச் சௌகரியமாக உள்ளது. அதோடு மதுக் கடைகளைத் திறந்து வைத்தும், லாட்டரிகள் நடத்தியும், மக்களது பணத்தைப் பெறுவதும் அரசாங்கத்துக்கு எளிதாக இருக்கிறது. 'சோஷலிஸம்' என்கிற வார்த்தையைக் கோஷிக்கிற வரையில் எவ்விதக் கவலையும் இல்லை; சோஷலிஸத்தைச் சொல்லிக்கொண்டே வரியாலும், மதுபானத்தாலும், லாட்டரியாலும் ஏழைகளின் பணத்தைச் சுலபமாகப் பெறலாம் என எண்ணுகிறது காங்கிரஸ் அரசாங்கம்.

மக்கள் உபயோகிக்கும் பண்டங்களின் மீது வரி போட்டு, அவர்களிடமிருந்து பணத்தைப் பெறும்வரையில் பட்ஜெட்டைப் பற்றிக் கவலையில்லை என்று பெர்மிட்—லைசென்ஸ்தாரர்களும் பொதுவில் கருதுகின்றனர்.

ஆனால் பட்ஜெட் உண்மையில் கவலைக்கிடமான நிலையில்தான் உள்ளது. ஏழைகளின் மீது போடுகிற வரி இறுதியில் தற்கொலைக்கு ஒப்பாக முடியும் என்பது உணரப்படவில்லை. அடிப்படையிலே செய்த தவறுகள் காரணமாக, நாட்டு நடப்புகள் சீர்குலைந்து விட்டிருக்கின்றன.

அந்நியக் கடன்களின் நிழலில் நீண்ட காலம் ஒளிந்துகொண்டிருக்க முடியாது. நாளடைவில் இந்த நிழலே பிராணபத்தாகும். இதை ஸ்ரீமதி இந்திரா காந்தி உணர வேண்டும். வறட்டுக் கொள்கைப் பிடிவாதத்துக்கு ஆட்படாதவர்களும், திறமைசாலிகளும், அநுபவஸ்தர்களும், சிரமங்களுக்கு முகம் கொடுக்கும் தீரர்களுமான கட்சிப் பற்றற்ற பெரியோர் அடங்கிய ஒரு குழுவிடம் தேசத்தின் நிருவாகத்தை ஒப்படைப்பதற்கு ஸ்ரீமதி இந்திரா சுயேச்சையாகத் திட்டமிட வேண்டும். திட்டக் கமிஷனுக்குப் பதில் இந்த நிர்வாகக் குழு இடம் பெற வேண்டும். ஜவாஹர்லால்ஜியின் ஆட்சிக்காலத்தில் திட்டக் கமிஷன் எவ்வளவு அந்தஸ்தும் அதிகாரமும் பெற்றிருந்ததோ அவ்வளவை இந்த நிர்வாகக் குழு இன்று பெற வேண்டும்.

தேசத்தின் ஜீவ ரத்தத்தை உறிஞ்சியும், அந்நிய நாடுகளிடம் மாளாமல் கடன் பட்டும், நான்காவது ஐந்தாவது திட்டங்களை நிறைவேற்றுவது இன்றையத் தேவை அல்ல. ஆட்சி அதிகாரத்தை அமைதியான முறையில் ஓர் உயர்தர ஆலோசகக் குழுவிடம் ஒப்புவிப்பதே தேவை. ராணுவ ரீதியில் அல்லாமல், அமைதியான அரசியல் முறைப்படி இயங்கும் குழு அதிகாரப் பொறுப்பை

## பாராட்டுகிறோம்!

ஒவ்வொரு நாட்டுக்கும் தொழில் துறையின் உயர் ஸ்தாபனம் ஒன்று இருப்பதுபோல், சர்வதேச அரங்கில் சர்வதேச வர்த்தக சங்கம் ஒன்று செயல்பட்டு வருகிறது. இரண்டாண்டுக்கு ஒரு முறை இதனுடைய பொதுக் கூட்டம் உலகத்தில் ஏதாவதொரு தலைநகரில் நடைபெறும். கடைசிக் கூட்டம் ஏதென்ஸ் மாநகரில் நடந்தது. அந்தக் கூட்டத்தில் ஐ. நா.வின் பொருளாதாரத் துறை ஸ்தாபனங்களுடன் உலகத் தொழில் பிரதிநிதிகள் தொடர்பு வைத்துக் கொள்ளுவது நல்லது என்று தீர்மானிக்கப்பட்டது. இதற்காக ஒவ்வொரு நாட்டிலிருந்தும் பிரதிநிதிகள் சிபாரிசு செய்யப்பட்டுப் பெயர்கள் அனுப்பப்பட்டன. சர்வதேச வர்த்தகச் சங்கத்தின் இந்திய ஆலோசனைக் கமிட்டி, புதுதில்லியைச் சேர்ந்த பிரபல தொழிலதிபர் திரு பரத்ராமைத் தேர்ந்தெடுக்குமாறு சிபாரிசு செய்தது. இச்சிபாரிசை சர்வ தேச வர்த்தகச் சங்கம் ஏற்றுக் கொண்டுள்ளது. இது திரு பரத்ராமுக்குப் பெரிய கௌரவம். இனி இவர் இந்தியாவின் சார்பில் ஐ. நா.வின் பொருளாதாரத் துறை ஸ்தாபனங்களுடன் அவசியமானபோதெல்லாம் தொடர்பு கொள்வார்.

ஐ.நா.வின் சார்பில் ஈகாபே, அன்க்டாட் என்று பலப்பல பொருளாதார நிறுவனங்கள் ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் அப்பகுதி மக்களுக்கு உதவி புரிந்து வருகின்றன. அவற்றுக்கெல்லாம் திரு பரத்ராமின் ஆலோசனைகளும் இனி பக்கபலமாக இருக்கும். அவருக்கு நமது நல்வாழ்த்துக்கள்.



திரு பரத்ராம்

## கண்டத்திலிருந்து தப்பினர்

தமிழக முதல்வர் திரு மு. கருணாநிதி அவர்கள் ஒரு பெரும் கண்டத்திலிருந்து உயிர் தப்பியிருக்கிறார். ஈரோடு அருகில், ஒரு சாலை திறப்பு விழா வைபவத்துக்குச் சென்றிருந்தார். மாலை ஏழு மணிக்குத் திடீர் என்று பலத்த காற்று அடிக்கவே, பந்தல் சரியத் தொடங்கியது. பந்தலுக்குள்ளிருந்த மக்களை வெளியேறும்படி கேட்டுக் கொண்டார். பின்னர் அவர் இருந்த மேடையும் சரியத் தொடங்கியது. மேடையை விட்டுக் குதித்து வெளியேறிச் சிறு காயங்களுடன் தெய்வாதீனமாக உயிர் தப்பினார். இறைவனின் கருணையினால் கருணாநிதி உயிர் தப்பிய செய்தி கேட்டுத் தமிழகத்து மக்களுடன் நாமும் இறைவனுக்கு நன்றி செலுத்துகிறோம்.

## பிரிந்தவர் கூடுவரோ!

இலங்கைத் தமிழரசுக் கட்சி, தான் இதுகாறும் ஆளும் கட்சிக்கு அளித்து வந்த ஒத்துழைப்பை நிறுத்திவிட முடிவு செய்துள்ளது. இத்தகைய தீவிர முடிவு எடுக்கும் நிலைக்கு இன்றைய இலங்கை ஆளும் கட்சி நடந்து கொண்டிருப்பது மிகவும் வருத்தமுறச் செய்வதாகும். திரு டட்லி சேனநாயகா சிறந்த அறிவாளி என்றும், ராஜதந்திரத்துடனும், நல்ல முறையிலும் நடந்து கொள்ளக் கூடியவர் என்றும் பெயரெடுத்தவர். அவரே இம்மாதிரியான சூழ்நிலையை உருவாக்கிவிட்டார் என்பது மிகுந்த ஏமாற்றமளிப்பதாகும். கிழக்கு ஆசியாவில் ஏற்பட்டு வரும் சூழ்நிலையை உணர்ந்து இலங்கை மக்கள் கம்யூனிஸ்டு சார்புள்ள கட்சிகளுக்கு ஆதரவு தராமல் இருக்க வேண்டும். இதற்கு அனுசரணையாகச் சிறந்த ஜனநாயகவாதியான டட்லி சேனநாயகா சிறுபான்மையராக வாழும் இலங்கை வாழ் தமிழ் மக்களின் குறைகளைப் போக்கும் வகையிலும் அவர்களுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதிகளை நிறைவேற்றி வைக்கும் வகையிலும் நடவடிக்கை எடுப்பார் என நம்புகிறோம்.

## முத்தையன் மறைவு

தொழிற் கல்வித் துறை இயக்குனர் திரு டி. முத்தையன் திடீரென்று இதய நோய் ஏற்பட்டு மரணமடைந்தார். அவர் மறைவு தமிழகத் தொழிற் கல்வித் துறைக்குப் பெரு நஷ்டம். வேகமாக யந்திரத் தொழில்கள் பெருகி வரும் இந்நாட்டிலே அதற்கேற்பத் தொழிற் பயிற்சி பெற்ற பொறிஇயல் நிபுணர்களைப் பல்வேறு தரத்திலும் உருவாக்க வேண்டும் என்ற குறிக்கோளோடு தமிழ் நாட்டில் ஏராளமான தொழிற் பயிற்சிக் கூடங்கள் ஏற்பட வழி வகுத்தவர் திரு டி. முத்தையன். அரசாங்கத்தில் சாதாரண பொறி இயல் துறை உத்தியோகஸ்தராகச் சேர்ந்து தமது கூர்த்த மதியாலும் உழைப்பாலும் மிக உயர்ந்த பதவியை அடைந்தார். பொறி இயல் துறைக்கும் வடமொழிக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு என்ற கருத்தில் பொறி இயல் துறை ஆசிரியர்கள் வடமொழிப் பயிற்சி பெற ஏற்பாடு செய்தார். எல்லோருடனும் இனிமையாகப் பழகும் பண்பாளர். அப்படிப்பட்டவர் மறைவினால் துயர் உறும் நண்பர்களுடனும் குடும்பத்தாருடனும் நாமும் துக்கத்தைப் பகிர்ந்து கொள்கிறோம்.



திரு முத்தையன்

# ராஜாஜியின் கருத்துக்கள்

தெலிங்கானா கிளர்ச்சியாலும் ஒரு நல்ல பயன் உண்டாகியுள்ளது. மொழிக்கு மட்டும் கொடுக்கப்பட்ட மிகையான முக்கியத்துவத்தை இக்கிளர்ச்சி பொய்ப்பித்துவிட்டது. தேசிய வாழ்வில் மொழியைப் போலவே முக்கியமான வேறு அம்சங்களும் உள்ளன என்று நிரூபித்து விட்டது.

அரசாட்சி என்பது வெறும் நிலப் பரப்பின் மீது உரிமை காட்டுகிற வியாபாரம் அல்ல. அது மக்களைப் பொறுத்த விஷயம். ஒரு ராஜ்யத்தின் எல்லைகளை விஸ்தரிப்பது எப்போதுமே நல்லது என்று சொல்ல முடியாது. ராஜ்ய எல்லைகளைச் சிறிதாக வைத்துக் கொள்வதே விவேகமான விதி என்றுகூடச் சொல்லலாம். ராஜ்யங்களை விஸ்தரிக்க வேண்டும் என்று சொல்பவர்களே பிற்பாடு அவ்வித விஸ்தரிப்பால் தமக்கு எவ்வித லாபமும் இல்லை என்று காண்கிறார்கள். இதெல்லாம் எவ்விதமாயினும், சென்ற பதினைந்தாண்டு நிகழ்ச்சிகளையெல்லாம் இன்று அலட்சியம் செய்தாலோ, மாற்றினாலோ பெரிய சிக்கல்கள் ஏற்படும் என்பதைத் தெலிங்கானா தலைவர்கள் உணர வேண்டும். பெர்லின் கிழக்கு ஜெர்மனிக்குள் அகப்பட்டிருப்பது போல், ஹைதராபாத்தைத் தெலிங்கானாவுக்குள் அகப்படுமாறு செய்வது உசிதமல்ல.

ஆந்திர ராஜ்யத்தின் ஐக்கியம் இன்றுள்ளவாறே காக்கப்பட வேண்டும் என்று ஆந்திர ஹைகோர்ட் வக்கீல்கள் உருக்கமாக வேண்டுகோள் விடுத்துள்ளனர். ஆந்திரத்தில் மட்டுமின்றி, நாடெங்கெனும் பொது வாழ்வில் உண்டாகியுள்ள உயிராபத்தான நிலைமையை அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர். இவை, பாகிஸ்தானில் நடந்தது போலன்றி, வேறு விதத்தில் பிரதமர் எடுக்க வேண்டிய நிருவாக மாற்றலுக்குக் கோடி காட்டுகின்றன. ஆந்திர வக்கீல்கள் கூறுவதாவது:

> முன்பு நம்மை அடிமைப்படுத்திய அதே சக்திகள் கடந்த இருபதாண்டுகளில் நாடெங்கிலும் அவிழ்த்துவிடப்பட்டிருப்பதைக் காண்கிறோம்...... தன்னலமற்ற தியாக உணர்வு அகற்றவொண்ணாத சுயநலத்துக்கு அடிபணிந்து விட்டது. சுயநலம், பிரதேசப் பித்து என்கிற குறுகலான, கீழ்த்தரமான கோணத்திலேயே எந்தப் பிரச்னையும் அணுகப்படுகிறது. இந்த ராஜ்யத்திலும் — தேசம் முழுவதிலுமே — நம்மைச் சூழ்ந்து வன்முறையும், கிளர்ச்சியும், உணர்ச்சி வெறியும், பொறுமையின்மையும், துவேஷப் பிரசாரமும் வலுத்துள்ளன.

★

பட்னா ஹிந்துமத மகாநாட்டில் பூரி சங்கராசாரியரால் ஏற்பட்ட நிகழ்ச்சி பற்றி மனக் கிளர்ச்சி உண்டாகியிருப்பது இயற்கை. ஆயினும் அது அளவுக்கு மீறிவிட்டது என்று கூற விரும்புகிறேன். எவ்வித முக்கியத்துவமும் இல்லாத ஒரு விஷயம் என்று இதனை விட்டுவிடவேண்டும். ஒருவர் எந்தக் கருத்தும்— அது எவ்வளவு தவறாக இருந்தாலும் சரி— கொண்டிருக்க உரிமை உண்டு. இக்கருத்தை வெளியிடும்போது குற்றம் செய்யத் தூண்டிவிட்டாலே நடவடிக்கை எடுக்கலாம். குற்றம் செய்யத் தூண்டிவிடாத வரையில், சிந்தனைச் சுதந்திரத்தையும், அச்சிந்தனையை வெளியிடும் சுதந்திரத்தையும் மதித்தால்தான் நாகரிக முன்னேற்றம் காண முடியும். ஒருவரது அபிப்பிராயத்தையே பொறுக்க முடியாமல், நாம் மனத்தில் சமநிலை பிறழ்ந்து அவரைச் சிறைவைக்க வேண்டும் என்று கூறினால் அதுவும் ஒருவித வெறியே. இவ்வெறி தவறான சமயக் கொள்கைகளில் காட்டப்படும் வெறியை விட எவ்விதத்திலும் தீமைக் குறைவானதல்ல.

★

பிர்லாக்களும், டாடாக்களும், மஃபத்லால்களும் தங்களது தொழிலக உடைமைகளைப் பெருக்கிக் கொண்டால், அதற்காக அரசியல்வாதிகள் ஏன் கவலைப்பட வேண்டும்? தொழிலகங்கள் நன்கு நடத்தப்பட்டால் லாபம் கிடைக்கத்தான் செய்யும்; இந்த லாபம் மீண்டும் முதலீடு செய்யப்பட்டால் தொழில் விஸ்தரிக்கவே செய்யும். கம்பெனிகளுக்கு விதிக்கப்பட்டுள்ள வரிகளைச் செலுத்திய பின்னரே இவ்விஸ்தரிப்பு ஏற்படுகிறது. இது குறித்து மகிழ்ச்சி கொள்ளாமல், இதைச் சகிக்கவொண்ணாததாகக் கருதுவதே இடதுசாரிக் கொள்கையின் அவசியமான அங்கமாக வளர்க்கப்படுகிறது. இடதுசாரிக் கொள்கை என்பது நல்ல நிருவாகத்தைக் கண்டு அருவருப்படைவது அல்ல; மேலும் மேலும் சமூக நலனை உயர்த்துவதுதான் இடதுசாரியின் இலட்சியமாக வேண்டும். நல்ல பொருளாதாரக் கொள்கையே சமூக நலனை ஏற்படுத்தும் சிறந்த கருவி.

நமது இடதுசாரி அபிமானிகள் 'தனியார்' வெற்றிகரமாக நிருவகிக்கும் தொழிலைவிட, ஒவ்வோர் ஆண்டும் படுநஷ்டம் அடைந்து வரும் 'பொதுத் துறை'த் தொழிலையே விரும்புகின்றனர்!

★

அந்நிய விவகாரங்களில் எந்தத் தரப்புடனும் கூட்டுச் சேராத தடஸ்தக் கொள்கையை நாம் பின்பற்றுவதாகப் பிரமாதமாகப் பேசப்படுகிறது. ருஷியாவுக்கும் சீனத்துக்கும் இடையே ஏற்பட்டுள்ள எல்லைத் தகராறில் இந்த நடு நிலைமைக் கொள்கை எங்கு போயிற்று? நான் இப்படிக் கேட்பதால் ஒருவித அபிப்பிராயமும் இல்லாமல், நடுநிலைமை வகிப்பதை நான் ஆதரிக்கிறேன் என்று அர்த்தமல்ல. இந்தக் குறிப்பிட்ட விவகாரத்தில் எந்தத் தரப்பு சரி, எந்தத் தரப்பு தப்பு என்று வரையறுத்துக் காட்ட நம்பகமான தகவல்கள் ஏதும் இல்லை என்பதையே சுட்டிக்காட்ட விரும்புகிறேன். || இம்

மாதிரியான ஒரு விவகாரத்தில் ருஷியாவைக் கவருவதற்காக நாம் தூண்டிலில் போடுவதை விட நமக்கு வேறு அவசியமான, பயங்கரமான பிரச்னைகள் ஏராளமாக உள்ளன.

ருஷிய — சீன எல்லைத் தகராறில் ருஷியாவுக்கு ஆதரவு தெரிவித்துச் சில மணிகள் ஆன உடனேயே, நம் சர்க்கார் ருஷியாவின் பால் எரிச்சல் தெரிவித்திருக்கிறது. பாகிஸ்தானுக்கு ருஷியா ஆயுத உதவி செய்வது குறித்தே இந்த எரிச்சல். பாகிஸ்தான் சீனத்துடன் நட்புக்கொள்ள விரும்பும் இச்சமயத்தில், இத்தகைய தொடர்பை முளையிலேயே கிள்ள வேண்டும் என்ற உத்தேசத்தில்தான் ருஷியா பாகிஸ்தானுக்கு ஆயுத உதவி புரிய முன்வந்திருக்கிறது என்பது யாருக்கும் புரிய வேண்டிய வெளிப்படையான விஷயம்.

பாகிஸ்தானுக்கும் நமக்கும் இடையே உள்ள சர்ச்சைகளிலும், சிரமங்களிலும் நாம் ருஷிய உதவியை நம்பிச் சார்ந்திருப்பது அவிவேகமான செயல்தான். அமெரிக்காவுக்கு நாம் எவ்வளவோ கடன்பட்டிருந்த போதிலும், ருஷியாவைச் சார்ந்திருப்பதே இந்திய சர்க்காருடைய மையமான கொள்கையாக இருந்து வந்திருக்கிறது. ஒருகால், இப்போது பாகிஸ்தானுக்கு ருஷியா உதவுவதை ஆட்சேபிப்பதே, புதிய விவேகம் பிறக்க வழியாக அமையலாம்.

★

அமைந்தகரையிலிருந்து சாந்தோமிலுள்ள அகில இந்திய வானொலி வரையுள்ள நீண்ட சாலைகளில் கடந்த பல மாதங்களாகத் தினமும் காரில் போய் வருகிறேன். இதில் நான் பார்ப்பதிலிருந்து சிகரெட் புகைக்கும் பழக்கம் முற்றிலும் கைவிடப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. சாலைகளில் உள்ள ஜனத்திரளிலும் சரி, மெரீனாவில் பொழுது போக்கும் ஏராளமான மக்களிலும் சரி, ஒருவர் கூடக் கைவிரல் இடுக்குகளிலோ வாயிலோ சிகரெட் வைத்துக் கொண்டு இத்தனை நாட்களில் நான் பார்க்கவில்லை. இது முன்பு கண்ட காட்சிக்கு முற்றிலும் மாறானது. இது எவ்வளவுக்குக் குறிப்பிடத்தக்கதோ, அவ்வளவுக்கு வரவேற்க வேண்டியதுமாகும். சிகரெட் உற்பத்தியாளர்கள் விளம்பரங்களை எவ்வளவோ அதிகப்படுத்தியும், மக்களிடையே பரவியுள்ள தெளிவான மருத்துவத் தீர்ப்பின் முன் சிகரெட் பிரசாரம் தோற்றுவிட்டிருக்கிறது. தமிழ் நாட்டின் அன்புக்குரிய முதல்வராக இருந்தவரைக் கொள்ளை கொண்டு போன புற்றுநோயின் ஏதுக்களை மக்கள் உணர்ந்திருப்பது இதற்குப் பெருமளவில் காரணமாகும்.

★

நண்பர்களுக்குக் கசப்பான எச்சரிக்கை விடுப்பது என் துரதிருஷ்டமாக இருந்து வருகிறது. தேர்தல் பிரசாரத்தில் உடனடிப் பயன் காண வேண்டும் என்பதற்காகக் கம்யூனிஸ்டுகளைத் தி. மு. க. உற்சாகமூட்டி வருகிறது. நீண்டகால அடிப்படையில் இது சரியான கொள்கை அல்ல. கம்யூனிஸ்ட்கள் இன்று மக்களின் நன்மதிப்பைப் பெற்றிருக்கவில்லை.

கம்யூனிஸ்ட்களைப் பலப்படுத்துவதால், தி. மு. க. தனக்கு நன்மை செய்து கொள்ளவில்லை; மக்களுக்கும் நன்மை செய்யவில்லை. காங்கிரஸுக்கு மாற்றாக தி. மு. க.வை ஆதரிப்பவர்கள், கம்யூனிஸ்ட்களிடம் அக்கட்சி தொடர்பு கொள்வதை விரும்பவில்லை.

★

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி ஏப்ரல் 12ந் தேதியை உழைப்பு தானம் நல்க வேண்டிய தேசிய தினமாகப் பிரகடனம் செய்தது. வயது வந்தவர்கள் எல்லோரும் — கம்யூனிஸ்டுகளாயினும் சரி, கம்யூனிஸ்டுகள் அல்லாதாராயினும் சரி — அந்த அந்தப் பிரதேசத்தின் தேவைகளுக்கு ஏற்ப பொது நலனுக்கு உகந்த காரியங்களைச் செய்யுமாறு கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். நகரங்களின் சாலைகளைச் சுத்தப்படுத்தல், பூங்காக்களில் வேலை செய்தல் போன்ற காரியங்களில் மக்கள் ஈடுபடுமாறு கோரப்பட்டனர். நமது நாட்டில் நாம் பின்பற்றக்கூடிய நல்ல தொண்டாகும் இது. நாம் தேசிய தினங்களைக் கொண்டாடுவதென்றால் அவ்விடுமுறை நாட்களைச் சோம்பலுக்கு அர்ப்பணிக்கிறோம். ருஷ்யாவை முன்மாதிரியாகக் கொண்டு தேசிய தினங்களை, பொது நலனுக்கு உகந்த வகையில் உழைப்பு தானம் அளிக்கும் திருநாட்களாகக் கொண்டாடுவோமாக.



## ஆசாரியர் அருள்மொழி

தாயே! கங்கை நீரில் கலந்த கழிவு கால் கீரும் புனித தீர்த்தமாவது போல்: ஸ்பரிச வேதி என்ற ரசவாத பீடத்தில் வைக்கப்பட்ட இரும்பும் பொன்னாக உயர்வது போல்: பாபங்களால் களங்கமடைந்த என் உள்ளமும் அன்பால் உன்பால் வைக்கப்பட்டபின் நிர்மலமாகாதா?

(ஆனந்தலஹரீ)



# நவமான நவராத்திரி

ஆதிசங்கர பகவத் பாதர்களின் இந்த ஜயந்தித் திருநாளில் ஓர் அற்புதமான அஞ்சலிப் பணியை அறிவிக்கிறோம்.

ஸ்ரீ சங்கரரை 'அத்வைத ஸ்தாபக ஆசாரியராக' நானிலம் கொண்டாடுகிறது. ஆனால், அவரே 'ஷண்மத பிரதிஷ்டாபக ஆசாரிய'ரும் ஆவார் என்பது உரிய அளவுக்கு உலகினரால் உணரப்படவில்லை. ஞானமார்க்கம் என்பது வெகு வெகு சிலராலேயே பின்பற்றத் தக்கது. பக்திதான் மக்களுக்கெல்லாம் பின்பற்றத்தக்க இனிய பாதை. மக்களை உண்மையான பக்தியில் நிலைநிறுத்துவதற்காக ஆதி ஆசாரியார் அரும் பணி புரிந்தார். புராதனமாக நம் நாட்டில் நிலவி வந்த ஆறு வழிபாடுகள் காணபத்தியம் (விநாயகர் வழிபாடு), கௌமாரம் (முருக வழிபாடு), ஸௌரம் (சூரிய வழிபாடு) சாக்தம் (சக்தி வழிபாடு), வைஷ்ணவம் (திருமால் வழிபாடு), சைவம் (சிவபெருமான் வழிபாடு) ஆகியவையாகும். இவை ஷண்மதங்கள் எனப்படும். இடைக் காலத்தில் இவ்வழிபாட்டு முறைகளில் பலி முதலிய கொடூர அம்சங்களும், அறிவுக்குப் பொருந்தாத மூட நம்பிக்கைகளும், குறுகிய மனப்போக்கும் மலிந்துவிட்டன. ஒரு புறத்தில் அவைதிக மதங்களும், மறுபுறத்தில் தூய்மை குன்றிய வைதிக வழிபாடுகளும் பரவிய தருணத்தில் பகவத்பாதர் திரு அவதாரம் புரிந்தார். ஞான மார்க்கத்தால் அவைதிக மதங்களை அகற்றினார். ஞான மார்க்கத்தின் தத்துவ சிகரத்தை எய்திய அவரே பக்தி மார்க்கத்தின் கவித்துவ சிகரத்தை எய்தி எல்லாத் தெய்வங்களின் மீதும் உள்ளமுருக்கும் துதிகளைப் பாடினார். இந்நாடெங்கும் க்ஷேத்திராடனமும், தீர்த்தாடனமும் செய்தார். மேற்கூறிய ஷண்மதங்களின் உக்கிரமான அம்சங்களையும், பேதமான போக்கையும் நீக்கி அவற்றை அன்பும் அறிவும் தூய்மையும் நிரம்பிய அழகு மதங்களாகச் செம்மை செய்தார். இவ்விதத்தில் ஷண்மதப் பிரதிஷ்டாபக ஆசாரியரானார்.

இந்த மாபெரும் பக்திப்பணியை உலகோர் உள்ளபடி உணர்ந்து ஆதி சங்கரருக்கு அஞ்சலி செலுத்த வேண்டும் என்பது நமது ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரியர்களின் திரு உள்ளம். அவர்களது திரு உள்ளத்தை அநுசரித்தும், அவர்களது அநுக்கிரகத்தைத் துணை கொண்டும் ஆதிசங்கரரின் பக்திப் பணியைப் பாருக்குப் பிரகடனம் செய்ய ஜூன் முதல் தேதியிலிருந்து ஒன்பதாம் தேதிவரையில் சென்னை மாநகரில், ''சங்கரரும் ஷண்மதமும்'' என்ற மாபெரும் மாநாடு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

முன்னாள் முதலமைச்சர் ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் தலைமையில் அமைந்த செல்வாக்குள்ள செயற்குழு, மாநாட்டை மகோற்சவமாக நடத்தத் திட்டமிட்டுள்ளது.

ஜூன் முதல் தேதி மாநாட்டுத் தொடக்கம். இரண்டாந் தேதியிலிருந்து ஒன்பதாம் தேதி வரையில் முறையே விநாயகர் — முருகன் — திருமால் — சூரியன் — சக்தி — சிவபெருமான் — ஸ்ரீ ராமன் — ஸ்ரீ கிருஷ்ணன் ஆகிய தெய்வங்களைப் பற்றிப் பேரறிஞர்களுடைய உரைகளும், பிரவசனங்களும், இன்னிசையும் நிகழ்கின்றன. கோயிற் கண்காட்சி ஒன்றும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

ஆதிசங்கரர் செம்மை செய்த ஷண்மதங்களைப்பற்றிய ஒரு சிறப்பு நூலும் வெளியிடப்படுகிறது. இந்நூலின் பிரதிகள் உலகெங்குமுள்ள தத்துவம் — தெய்வ இயல் — இந்திய ஆராய்ச்சி இயல் பேராசிரியர்களுக்கு அன்பளிப்பாக அனுப்பப்படவிருக்கிறது.

ஃ ஃ ஃ

நவம் என்றால் 'ஒன்பது' என்று ஒரு பொருள்; 'புதுமையானது' என்று இன்னொரு பொருள். ஜூன் முதல்தேதியிலிருந்து ஒன்பது நாட்கள்நடக்கும் ஷண்மதவிழா பகவத்பாதர்களுக்கு அஞ்சலி செலுத்தப்படும் நவமான நவராத்திரி. இதில் மக்கள் யாவரும் கலந்துகொண்டு சங்கரரின் பக்திப் பணியையும், ஹிந்து மதத்திலுள்ள சமயப் பிரிவுகளின் அடிப்படை ஐக்கியத்தையும் உணர்வராக!



# சில ரஸத் துளிகள்



## அன்றும் இன்றும்

ஒரு சமயம் அலிகாருக்குக் காந்திஜி சென்றிருந்தபோது, அவருக்கு உணவு தயாரித்துத் தரவேண்டும் என்று ஆசைப்பட்டு ஓர் அன்பர் பாவின் அனுமதியைக் கோரினார். பா இசைந்தார். பால் தம்ளரில் ஒரு ரோமம் இருந்ததைக் காந்திஜி கவனித்து விட்டு விசாரித்தபோது அவருக்கு உணவு தயாரிக்க ஓர் அன்பர் ஆசைப்பட்டதால் அவரிடம் அந்தப் பொறுப்பை அளித்ததாக பா கூறினார். காந்திஜி சினத்துடன் ''அதன் விளைவைப் பார்த்தாயா?'' என்று பாலைக் காட்டி விட்டு அதை அருந்த மறுத்து விட்டார். கஸ்தூரி பா கண்ணீர் மல்க, ''ஆசையுடன் உங்களுக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்று ஒருவர் கேட்கும்போது மறுத்தால் வருந்துவாரே என்று கருதி அனுமதியளிக்க நேரிடுகிறது. அனுமதித்தால் அனுபவக் குறைவால் தவறு நேர்ந்து விடுகிறது. என்னை மன்னித்துவிடுங்கள்'' என்று கெஞ்சினார். ஆனால் பாலை அருந்தக் காந்திஜி மறுத்து விட்டார்.

இரவும் பகலும் உழைக்கும் பாபு பாலை அருந்த மறுத்துப் பட்டினி கிடக்கிறாரே என்று பா சஞ்சலம் அடைந்தார். எவ்வளவு வேலை இருந்தாலும் பாபுவின் பணிவிடைக்கே முதலிடம் என்று உறுதி எடுத்துக் கொண்டார்.

பா மறைந்த பிறகு ஒரு நாள் பாலில் ரோமம் இருப்பதைப் பாபு பார்த்தார். உடனே அதை எடுத்து எறிந்து விட்டுப் பாலை அருந்தினார். அருகிலிருந்த ஓர் அன்பர் அதைக் கவனித்து விட்டு, ''பாபுஜி, பா இருக்கும் காலத்தில் பாலில் தும்பு இருந்தால்கூட அவரைக் கடிந்து கொண்டு பாலை அருந்த மறுத்திருக்கிறீர்களே, இன்று உங்களுடைய இயல்பே மாறிவிட்டதே'' என்றார்.

காந்திஜி சிறிது நேரம் சிந்தனை வசப்பட்டார். பிறகு சொன்னார்: பாவின் பணிவிடை தனித்தன்மையானது. அவளுடைய நிலைக்கு உயர மற்றவர்களை எதிர்பார்க்க முடியாது.

★ அண்ணலின் வாழ்விலே ★

## நினைவும் கனிவும்

காந்திஜி 1920ல் ஒரிஸ்ஸாவில் முதன் முதலாகச் சுற்றுப் பயணம் செய்தபோது வறுமையின் கொடுமையால் மக்கள் தவிப்பதைக் கண்டு மனம் கசிந்தார். அந்தச் சுற்றுப் பயணத்தில், அந்த வட்டாரத்தில் தேசப் பணியாற்றிக் கொண்டிருந்த பட்டதாரிகளான சில இளைஞர்களும் கலந்து கொண்டார்கள். ஒரு கிராமத்தில் நிலக்கிழார் ஒருவர் காந்திஜி குழுவினருக்குக் கரும்புச் சாறு அளித்து உபசரிக்க ஏற்பாடு செய்திருந்தார். தொண்டர்களில் சிலர் கரும்புச் சாறு பெறுவதற்காகப் போட்டி போட்டுக் கொண்டிருந்த சமயத்தில் காந்திஜி அங்கு வந்தார். அப்போது நித்யானந்த கனுங்கோ என்ற இளைஞர் தமக்கு இன்னும் ஒரு குவளை கரும்புச் சாறு வேண்டும் என்று இரைந்து கேட்டதைக் கவனித்த காந்திஜி, 'என்ன செய்தி?' என்று கேட்டார். 'கனுங்கோ முதலில் ஒரு குவளை கரும்புச் சாறு குடித்து விட்டு மீண்டும் வேண்டும் என்று கேட்கிறார், கொடுக்க முடியாது என்றதைக் கேட்டுச் சண்டை போடுகிறார்' என்று அருகிலிருந்த ஒரு தொண்டர் விடையளித்தார். காந்திஜி அருகிலிருந்த எல்லாத் தொண்டர்களையும் சமாதானப்படுத்தி உபசரித்து விட்டுச் சென்றார்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு, ஒரிஸ்ஸாவில் காங்கிரஸ் அமைச்சரவை ஏற்பட்டது. திரு கனுங்கோ அமைச்சரவையில் இடம் பெற்றார். 1938ல் அவர், ஒரிஸ்ஸா பிரச்னைகளைப் பற்றி காந்திஜியுடன் கலந்தாலோசிப்பதற்காக வர்தாவுக்கு வந்தார்.

ஆசிரம ஊழியர்களில் சிலர் அவரை வரவேற்றுவிட்டு, காந்திஜிக்குத் தெரிவிக்கச் சென்றார். சில நிமிஷங்களுக்குள், ஆசிரமப் பெண்களில் ஒருத்தி, திரு கனுங்கோவிடம் ஒரு குவளை நிரம்பக் கரும்புச் சாறு அளித்து அருந்துமாறு உபசரித்தார்.

''இது எதற்கு?'' என்று திரு கனுங்கோ வியப்புடன் கேட்டதற்கு, அந்தப் பெண் ''உங்களுக்குக் கரும்புச் சாறு குடிப்பதில் விருப்பம் அதிகம் என்று பாபுஜி கூறியதுடன் ஒரு குவளை நிரம்பக் கரும்புச் சாறு அளிக்குமாறு கூறினார்'' என்று முறுவலுடன் கூறினாள்.



திரு கனுங்கோ வியப்படைந்தார். பிறகு சிறிது யோசித்தபோது பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு ஒரிஸ்ஸாவில் காந்திஜியின் முன்னிலையில் கரும்புச் சாறு குடிப்பதற்குப் போட்டியிட்டது நினைவுக்கு வந்தது. அவர் காந்திஜியின் ஞாபக சக்தியை எண்ணி வியப்படைந்தார். பிறகு கரும்புச் சாற்றை ஏற்றுப் பருகினார். பிறகு, காந்திஜியைச் சந்தித்தபோது, தம் வியப்பையும் நன்றியையும் தெரிவித்துவணங்கி ஆசிபெற்றார்.

—கே. எஸ். ஜே.



சிறுவன் ஐஸன்ஹோவர் நடத்திய முதல் யுத்தம் ஒரு வாத்துடன்! மாமா வீட்டிலே தங்கியிருந்தான் பையன். கொல்லைப் பக்கம் இவன் போன போதெல்லாம் அங்கு வளர்ந்த ஒரு வாத்து இவனைக் கொத்த வந்து துரத்தி அடித்தது. பல தடவைகளில் இவன் மிரண்டு போய் உள்ளே ஓடி வருவதைப் பார்த்த இவன் மாமா, ''இந்தா இதை வைத்துக் கொள்'' என்று சொல்லி மரக் கிளையிலிருந்து குச்சி ஒன்றை ஒடித்துக் கொடுத்தார். அதை வீசியபடி 'ஜம்'மென்று நடந்தான் ஐக்.

# வெற்றிக் கதைகள்

தமது வாழ்க்கையைப் பற்றி, ''நண்பர்களுக்கு நான் கூறும் கதைகள்'' * என்ற தலைப்பில் ஐஸன்ஹோவர் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். இவற்றை 'வெற்றிக் கதைகள்' என்று வர்ணிப்பது பொருந்தும். ஐஸன்ஹோவரது வாழ்க்கையே சாதாரணமான நிலையிலிருந்து தொடங்கி அமெரிக்க ஜனாதிபதி பதவி வரை உயர்ந்த மிக வெற்றிகரமான வாழ்க்கை. அந்த வாழ்க்கையின் வெற்றியுடன் பிணைந்திருப்பதோ உலக யுத்தத்தில் நேச நாடுகள் அடைந்த மகத்தான வெற்றி—தர்மத்தின், நியாயத்தின் வெற்றி. ஆகவே ஐஸன்ஹோவரின் வாழ்க்கை நூற்றுக்கு நூறு வெற்றிகரமான வாழ்க்கை அல்ல; நூற்றுக்கு இருநூறு வெற்றிகரமான வாழ்க்கை!

இருப்பினும் இந்த நூலில் அவர் தமது வெற்றிகளை மட்டும் சொல்லிக் கொண்டு போகாமல் சிற்சில இடங்களில் தமது சில்லறைத் தோல்விகளையும் கூறித் தம்மைத்தாமே கிண்டல் செய்து கொள்கிறார். இதனால் நூலின் சுவை கூடுகிறது.—பாயசத்தை அள்ளி அள்ளிச் சாப்பிடுபவன் இடையில் கொஞ்சம் ஊறுகாயை ருசி பார்ப்பதுபோல!

* At Ease-Stories I tell to Friends by Dwight D. Eisenhower — Doubleday & Co., Inc., Garden City, New York.

இப்போது மிரண்டு ஓடியது வாத்துதான். ராணுவ விதிமுறைகளில் முதல் பாடம் கற்றான் ஐக்: ''எதிரியை விட உன் பலம் அதிகமாக இருந்தாலொழியத் தாக்க முற்படாதே!''

ஐஸன்ஹோவருடைய தகப்பனாருக்குத் தவறு செய்யும் தமது பிள்ளைகளைப் பிரம்பால் அடிப்பது என்பது சகஜமான அன்றாட காரியம். ஆனால் தாயார் ரொம்பக் கோபம் வந்தாலொழிய அடிக்க மாட்டாள். அடி கிடைக்குமே என்பதற்காகத் தன் குழந்தைகள் பயந்து தவறு செய்யாமல் இருந்தால் அது அவளுக்குப் போதாது; தவறு செய்யக்கூடாது என்பதற்காகவே தவறிழைக்காமல் இருக்க வேண்டும் என்று அடிக்கடி வற்புறுத்திச் சொல்வாள். ''தன் மனத்தை வெற்றி கொள்பவன் யுத்தத்தில் ஒரு நகரை வெற்றிகொண்டவனை விட உயர்ந்தவன்'' என்பாள்.











- மேஜர் ஐஸன்ஹோவரும் ஜெனரல் மக் ஆர்தரும் பிலிப்பைன்ஸில்.
- 'ஐக்'.
- குழந்தைகளிடம் கொஞ்சும் தாத்தா.
- ஜனாதிபதியும் உபஜனாதிபதியும் தங்கள் மனைவிமாருடன்.
- இந்தியாவுக்கு வந்திருந்தபோது விவசாயப் பொருட்காட்சியைத் திறந்து வைத்தார்.
- ராணுவத்தில் உயர் அதிகாரிகளுடன்ஆலோசனை.

ஐக்குக்குச் சிறு வயதிலிருந்தே ஒரு விநோதப் பழக்கம் உண்டு. தனக்கு யாராவது தீங்கு இழைத்தால் — யாரையாவது தனக்குப் பிடிக்கவில்லை என்றால் — அவன் அல்லது அவள் பெயரைத் துண்டுக் காகிதத்தில் எழுதுவான். தனது மேஜை டிராயர்களுள் கீழ் டிராயரை இழுத்துத் திறந்து அதனுள் அந்தத் துண்டுக் காகிதத்தைப் போட்டு மூடி விடுவான். அத்துடன் அந்நபரையும் அவன் இழைத்த தீங்கையும் தன் நினைவிலிருந்து அப்புறப் படுத்திவிடுவான். யார் மீதும் வன்மமோ துவேஷமோ பாராட்டி மனம் குன்றாமல் இருக்க இந்தப் பழக்கம் உதவியது. நாளா வட்டத்தில் இந்த டிராயரில் குப்பை தாராளமாகவே சேர்ந்தது.

''இந்தக் குப்பையில் தேடினால் ஹிட்லரின் பெயர் அகப்படுமா?''

''கிடைக்காது'' என்கிறார் ஐக். ''ஹிட்லரைச் சமாளிக்க இதைக் காட்டிலும் சிறந்த வழிகள் இருந்தன.''

ஐஸன்ஹோவர் என்பதே ஒரு ஜெர்மானியப் பெயர்தான்! அதற்கு 'இரும்பினால் கலைப் பொருள்களைப் படைப்பவன்' என்பது பொருள். ஐக்கின் மூதாதையர்கள் ஜெர்மனியிலிருந்து அமெரிக்கா வந்து குடியேறியவர்களே. ஆகவே ஹிட்லரை வெற்றி கண்ட நேசநாட்டுப் படைகளுக்கு ஐஸன்ஹோவர் தலைமை வகிக்க நேர்ந்ததை விதியின் அதிசய விளையாட்டுக்களில் ஒன்றாகத் தானே கருத வேண்டும்!

எட்டுப் பேர்களைக் கொண்ட ஐஸன்ஹோவர் குடும்பத்துக்கு இருந்தது 818 சதுர அடி பரப்பளவே உள்ள வீடுதான். சிறுவன் ஐக்தான் படுக்கையை விட்டுக் கடைசியாக எழுந்திருப்பான். ஆனால் இதனால் அவன் செய்ய வேண்டிய காரியங்களின் சுமை சற்றும் குறைந்து விடாது. தாயாரும் சகோதரர்களும் அவன் வேலை செய்வதிலிருந்து தப்ப விட மாட்டார்கள். தண்ணீர் இறைப்பது, துணி துவைப்பது, ஆப்பிள் அறுவடை, கோதுமை அறுவடை போன்ற பலதரப்பட்ட வேலைகளைக் குடும்பத்துக்காகவும் கூலிக்காகவும் செய்வான் ஐக்.

ஃபுட்பால் விளையாட்டில் (நமது கால் பந்தாட்டம் அல்ல) சிறுவனுக்கு ரொம்பப் பிரியம். ஒரு சமயம் காலில் பலமான அடிபட்டு டாக்டர் காலை வெட்டி எடுத்துவிட வேண்டியதுதான் என்று அபிப்பிராயப்பட்டார். ஐக் காலை இழக்க நேரிடுமே என்று அஞ்சவில்லை. ஃபுட்பால் விளையாட முடியாதே என்று கவலைப்பட்டான். அதனால் பிடிவாதமாக, என்ன ஆனாலும் சரி காலை இழக்கச் சம்மதிக்க மாட்டேன் என்றான்,



மனைவி: உங்களை ஒரு கேள்வி கேட்க வேண்டும் என்று பல வாரங்களாகக் காத்திருக்கிறேன்.

கணவன்: அதற்குத் தகுந்த பதிலை வைத்துக் கொண்டு பல மாதங்களா ரெடியா இருக்கேன்.

புரையோடிய காயம் தெய்வ அருளால் நாளடைவில் குணமாகி விட்டது. ராணுவ அதிகாரியாகப் பதவி ஏற்ற பிறகும்—பதவிகளில் படிப்படியாக உயர்ந்து வந்த போதிலும் — பல காலம் வரை ஐஸன்ஹோவர் படை வீரர்களுக்கு ராணுவப் பயிற்சியுடன் ஃபுட்பால் விளையாட்டிலும் பயிற்சி அளித்து வந்தார்.

வெஸ்ட்பாயிண்ட் என்பது அமெரிக்காவில் ராணுவ அதிகாரியாக விளங்கப் பயிற்சி அளிக்கும் கல்லூரி. ஐஸன்ஹோவரும் இதில்தான் சேர்ந்தார். படிப்பிலே அவர் சூடிகையாக இல்லை; ஆனால் விஷமத்திலே படுசுட்டியாகத் திகழ்ந்தார்! அவர் இங்கு இருந்த கடைசி ஆறு மாதங்களில் பதினெட்டுக் குற்றங்களைச் செய்ததாக இக் கல்லூரியின் குறிப்பேடுகள் சாட்சி சொல்லுகின்றன. அப்படியானால் மற்ற நாட்களில் அந்தக் கல்லூரி என்ன பாடு பட்டிருக்கும்! பிரார்த்தனைக்கு நேரம் கழித்து வந்தது முதல் ஸ்பானிஷ் மொழியில் வியாசம் சரியாக எழுதவில்லை என்பது வரையில் பல குற்றங்களை ஆறு மாதப் பட்டியல் காட்டிக் காட்டுகிறது.

ராணுவ அதிகாரிகள் விசேஷ நிகழ்ச்சிகளின்போது அணிய வேண்டிய பலதரப்பட்ட உடைகள் உண்டு. இவற்றில் ஒன்று ''ஃபுல் டிரெஸ் கோட்'' எனப்படுவது. இந்தக் கோட் பின்புறம் நீண்டு தொங்குவது போலவும் முன்புறம் இடுப்பளவோடு நின்று விடுவது போலவும் தைக்கப்பட்டிருக்கும்.

ஒரு சமயம் கார்பொரல் ஆட்லர், ஐஸன்ஹோவரையும் மற்றொரு மாணவரையும் ''ஃபுல் டிரெஸ் கோட்'' அணிந்து வருமாறு பணித்தார். மாணவர் இருவரும் வார்த்தைக்கு வார்த்தை உத்தரவை நிறைவேற்றினர். அதாவது, ''ஃபுல் டிரெஸ் கோட்'' மட்டுமே அணிந்து ஆட்லர் முன்னிலையில் போய் நின்று 'ஸல்யூட்' செய்தனர்.

அரை நிர்வாணமாக நிற்கும் அவர்களைப் பார்த்த ஆட்லர் 'வீல்' என்று எட்டுத் திக்கும் எட்ட அலறினார்! அவரது கோபம் மாணவர் இருவருக்கும் கடுமையான தண்டனையைப் பெற்றுத் தந்தது. ஆனால் ஆட்லரின் முகம் போன போக்கை நினைத்து நினைத்துச் சிரித்ததில் ஐக்குக்குத் தண்டனையின் சிரமமே தெரியவில்லை!

இதே ராணுவக் கல்லூரியின் குறிப்பேடுகள் மாணவன் ஐஸன்ஹோவரைப் பாராட்டு முகமாகவும் பல விஷயங்களைக் கூறுகின்றன. அவற்றில் ஒன்று: ''இவன் ஒரு பிறவித் தளபதி.''

ஃ ஃ ஃ

ஐஸன்ஹோவருக்குக் கல்யாணமான பிறகு கடமை அவரைப் பல சந்தர்ப்பங்களில் மனைவி மேமையை விட்டுப் பிரிந்திருக்க வைத்தது. விடுமுறை தினங்களில் அவள் தன் கணவனைப் பார்க்க ராணுவ முகாமுக்கு வருவாள். ஸான் அன்டோனியோவில் அவர் இருந்தபோது அங்கு வந்து போக பஸ், ரயில் போன்ற வாகன வசதிகள் ஏதுமில்லை. ஆனால் கணவனைப் பார்க்காமல் இருக்கத் தன்னால் முடியாது என்பதால் மேமை ஒரு காரை 'ஸெகண்ட் ஹாண்'டில் வாங்கி விட்டாள். காரில் வருகிறேன் என்று ஐக்குக்குக் கடிதமும் எழுதி விட்டாள். ஐஸன்ஹோவருக்கு ஒரே கவலை. அதற்குக் காரணமும் இல்லாமல் போகவில்லை. ஞாயிற்றுக்கிழமையன்று சாலையிலேயே காத்திருந்தார். கார் அவர் கண்ணுக்குத் தென்பட்டது; முன்னேறி வந்து அவரை நெருங்கியது. ''ஐக்! இதை நிறுத்தேன்! இதை நிறுத்து!'' என்று காருக்குள்ளிருந்த படியே அலறினாள் மேமை!

அவளுக்குக் கார் ஓட்டவே தெரியாது. ஐக்கைப் பார்க்க வேண்டும் என்ற ஒரே ஆவலில் காரை வாங்கி அரைகுறையாக ஓட்டக் கற்றுக் கொண்டு கிளம்பி வந்து விட்டாள்! நிறுத்தத் தெரியவில்லை!

அந்தக் காலத்துக் கார்களில் அகலமான 'ஃபுட் போர்ட்' உண்டு. அதிக வேகமாகவும் போகாது. ஆகவே ஐக் ஃபுட் போர்டில் பாய்ந்து ஏறி உட்புகுந்து காரை நிறுத்தினார்!

ஃ ஃ ஃ

ஐஸன்ஹோவர் சீட்டாட்டத்தில் ரொம்பக் கெட்டிக்காரர். சின்ன வயதிலிருந்தே ஆடி ஆடிப் பழக்கம். ராணுவத்தில் தமது சகாக்களுடன் ஆடும்போது சுலபமாக ஜெயிப்பார்.

ஒரு சமயம் இளம் ராணுவ அதிகாரி ஒருவர் ஐக்குடனும் வேறு இருவருடனும் சீட்டாட அமர்ந்தார். வெகு சீக்கிரம் தம் மிடமிருந்த பணத்தை இழந்து விட்டார். அவருக்கு நன்றாக ஆடத் தெரியாது போனாலும் சீட்டாடும் பழக்கத்தை அவரால் விட முடியவில்லை. மறுநாளும் அதற்கு மறு நாளும் வந்து ஆடி ஆடித் தோற்றுக் கொண்டே இருந்தார். ஒரு நாள் இந்த இளைஞர் தமது மனைவி சிரமப்பட்டு வாங்கி வைத்திருந்த சேமிப்புப் பத்திரங்களைக் கொண்டு வந்து அவற்றைப் பணயம் வைத்து ஆடினார். அவர் நிலை கண்டு பரிதாபப்பட்டார் ஐக். எனினும் ஆட வேண்டாம் என்றால் அந்த இளைஞர் தன்மான உணர்வுடன் துள்ளி எழுந்து சீறுவார் என்பது ஐக்குக்குத் தெரியும். ஆகவே அவர் ஒரு தந்திரம் செய்தார். சீட்

டாட்டத்தில் தாமும் மற்ற இரு நண்பர்களும் அந்த இளைஞருக்குத் தெரியாத வகையில் வேண்டுமென்றே தோற்பது என்று முடிவு செய்தார். அப்படியே மூவரும் தோற்று அந்த இளைஞர் இழந்த பணத்தையெல்லாம் இரண்டு நாட்களில் திரும்பப் பெற வழி செய்தனர். பிறகு அன்று மாலை ஐக் உயர் அதிகாரியிடம் போய், ''இந்தப் பட்டாளத்தில் யாரும் பணம் வைத்துச் சீட்டாடக் கூடாது என்று உத்தரவு போடுங்கள்'' என்று கேட்டுக்கொண்டார். அவ்வாறே ஆணை பிறந்தது.

அந்த இளைஞர், ''அடடா! என் அதிர்ஷ்டம் மாறி வெற்றிமுகமாகத் திரும்பும் வேளையில் இப்படி ஓர் உத்தரவு பிறப்பிக்கப்பட்டு விட்டதே!'' என்று ஐக்கிடமே வந்து ரொம்பவும் குறைப்பட்டுக் கொண்டார்!

ஃ ஃ ஃ

**பி**லிப்பைன்ஸில் ஐக் பணியாற்றிக் கொண்டிருந்தபோது உலக யுத்தம் தொடங்கியது. ஜெர்மனியிலிருந்து யூதர்கள் பெருவாரியாக வெளியேற்றப்பட்டனர். அகதிகளாக வெளியேற்றப்பட்ட பல்லாயிரக் கணக்கான யூதர்களுக்கு எந்தெந்த நாடுகளிலெல்லாம் அடைக்கலம் கிடைக்கும் என்று பார்த்து அவர்களின் புனர்வாழ்வுக்கு ஆவன செய்யுமாறு ஐஸன்ஹோவர் கேட்டுக்கொள்ளப்பட்டார். இந்தப் பணியை அவர் மேற்கொண்டால் சம்பளமாக ஆண்டொன்றுக்கு அறுபதாயிரம் டாலர்கள் தருவதாகவும் சொன்னார்கள். ஐக்கை மலைக்க வைத்த ஒரு 'தொகைதான் இது. என்றாலும் ஐக் இந்த வேலையை ஏற்க மறுத்து விட்டார், தமது வாழ்க்கை ராணுவத்துடன் பின்னிப் பிணைந்துவிட்ட ஒன்று என்ற கருத்தில்.

யுத்த முஸ்தீபுகளுக்கு உதவத் தாய்நாடு திரும்பத் தீர்மானித்தார் ஐக். அப்போது பிலிப்பைன்ஸ் ஜனாதிபதி க்யூஸான், ''உங்கள் சேவை இந்த நாட்டுக்குத் தேவை. இதோ உங்கள் புதிய உத்தியோக நியமனப் பத்திரம். கையெழுத்திட்டுத் தயாராக வைத்திருக்கிறேன். உங்கள் சம்பளம் என்ன என்பதை நீங்களே தீர்மானித்து ஒரு தொகையை இதில் எழுதிக் கொள்ளுங்கள்'' என்று கூறி ஒரு தாளை ஐஸன்ஹோவர் பக்கமாக நீட்டினார். ஐக்கின் நெஞ்சம் நெகிழ்ந்தது, ஜனாதிபதி தம்மிடம் வைத்திருந்த மதிப்பைக் கண்டு. எனினும் அந்தத் தாளைத் தொட்டுக்கூடப் பார்க்காமல் அமெரிக்கா திரும்பினார், உலக யுத்தத்தின்போது தமது முதல் கடமை அதுதான் என்பதை உணர்ந்தவராக.

**ப**டிப்படியாகவும் துரிதமாகவும் உத்தியோக உயர்வுகள் பெற்று ஆப்பிரிக்காவில் யுத்தத்தை நடத்தும் பெரும் பொறுப்பை ஏற்றார் ஐக்.

மத்தியதரைக் கடலில் பான்டெல்லெரியா என்று ஒரு தீவு. இத்தாலியர் வசமிருந்தது. அதைப் பிடிக்க முஸ்தீபுகள் நடக்கும்போது பதினோராயிரம் இத்தாலியர்கள் அத்தீவில் இருப்பார்கள் என்று மதிப்பிட்டார் ஐக். சர்ச்சில் அதில் மூவாயிரம் இத்தாலியர்களுக்கு மேல் இருக்க மாட்டார்கள் என்றார். ஐஸன்ஹோவர் ஒரு பந்தயம் வைத்தார். மூவாயிரத்துக்குக் குறைவாக எத்தனை இத்தாலியர்கள் இருக்கிறார்களோ அத்தனை இத்தாலிய 'ஸௌ' நாணயங்களை நான் உங்களுக்குத் தருகிறேன். மூவாயிரத்துக்கு அதிகமாக எத்தனை இத்தாலியர்கள் இருக்கிறார்களோ அத்தனை இத்தாலிய 'ஸௌ' நாணயங்களை நீங்கள் எனக்குத் தாருங்கள் என்றார். சர்ச்சில் ஒப்புக் கொண்டார். தீவு பிடிக்கப்பட்ட பிறகு கணக்குப் பார்த்ததில் ஐக்கின் மதிப்பீடு ஏறக்குறைய சரியாக இருந்தது. சர்ச்சிலுக்கு எட்டாயிரம் ஸௌ நஷ்டம். அதாவது கிட்டத்தட்ட பதினொரு ரூபாய்! சர்ச்சில் சொன்னார்: ''இதே விகிதத்தில் தொடர்ந்து நீங்கள் கைப்பற்றும் ஒவ்வொரு இத்தாலியனுக்காகவும் மகிழ்ச்சியுடன் உங்களுக்குப் பணம் கொடுக்க நான் தயார்!''

1942ல் ஹிட்லரை எதிர்த்த நேச நாடுகளின் படைகள் அனைத்துக்கும் தலைமைப் பதவி ஏற்றார் ஐஸன்ஹோவர். தலைமைக் காரியாலயம் இங்கிலாந்தில் போர்ட்ஸ்மவுத்தில் இருந்தது. 1944ல் ஹிட்லரின் ஐரோப்பா மீது நேசநாடுகள் படையெடுத்த சில நாட்களுக்குப் பின் ஜெர்மானியர் அனுப்பிய வி—1 பறக்கும் குண்டுகள் இங்கிலாந்தில் விழ ஆரம்பித்தன. வி—1 வருகிறது என்றதுமே அபாய அறிவிப்பு அலறும். ஐஸன்ஹோவரும் உடன் இருந்தவர்களும் பாதுகாப்பான இடத்துக்கு ஓடுவார்கள். அப்படி ஓடிக் கொண்டிருக்கையிலேயே வி—1 வருவது எதிரே தெரியும்! 'அது இங்கே விழாமல் நம் தலைக்கு மேலாகப் பறந்துவிடக்கூடாதா?' என்று அவர்கள் ஆசைப்படுவார்கள். கூடவே 'ஐயோ, இவ்வாறு நினைப்பது தவறல்லவா? நம்மீது விழாமல் அப்பால் போய் வேறு யாரையாவது அது தாக்கினால்...?' என்று எண்ணி மனம் கலங்குவார்கள்.

விரைவிலேயே பறக்கும் குண்டுகளுக்கும் ஹிட்லருக்கும் ஐரோப்பிய யுத்தத்துக்கும் முடிவு ஏற்பட்டது. ஹிட்லர் வீழ்ந்த பிறகு ஒரு நாள் மன்னர் ஆறாவது ஜார்ஜ் ஐஸன்ஹோவரைத் தனித்துச் சந்திக்க விரும்புவதாகச் சொல்லி பக்கிங்ஹாம் அரண்மனைக்கு வருமாறு பணித்தார்.

அதன் காரணம் அங்கு போனபிறகுதான் ஐஸன்ஹோவருக்குத் தெரிய வந்தது. பிரிட்டனின் மிக உயர்ந்த கௌரவமான 'ஆர்டர் ஆஃப் மெரிட்' பதக்கத்தை மன்னர் ஐக்குக்கு அணிவித்தார். இதைவிட ஒரு பெரிய கௌரவத்தை அந்நாட்டில் யாருமே பெற முடியாது. எனினும் ஐஸன்ஹோவருக்கு மேலும் ஒரு தனிப்பட்ட கௌரவம் கிட்டியது. மன்னர் அவரிடம் ஸீல் வைத்த ஓர் உறையைக் கொடுத்து அரண்மனையை விட்டுச் சென்ற பிறகுதான் இதைப் பிரித்துப் பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

அந்த உறையில் இருந்தது ஒரு கடிதம். ஐஸன்ஹோவருக்குத் தம்முடைய நன்றியையும் தமது மக்களுடைய நன்றியையும் தெரிவித்து எழுதியிருந்தார் மன்னர். இதில் மேலும் ஒரு விசேஷம், மன்னர் யாரோ டைப் செய்து கொண்டு வந்த கடிதத்தில் கையெழுத்துப் போடாமல் தாமே தம் கைப்பட ஐஸன்ஹோவருக்கு எழுதியிருந்தது தான். விலை மதிக்க முடியாத பொக்கிஷமல்லவா அது?

— **வி. ராஜேந்திரன்**

*Studies in Concentration*

# THE ARTISAN

*To create objects of lasting beauty, the artisan works patiently — chipping, filing, engraving and polishing — and ultimately puts life into the finished masterpiece..... a product of single-minded concentration.*

Parry's, too, is a long, entrancing story of concentrated effort. Started as a trading concern over 180 years ago, Parry's has, over the years, gradually widened its interests. Its record of expansion has given it new dimensions as a progressive industrial force.

E.I.D.-Parry is an industrial complex, covering Fertilisers, Pesticides, Hybrid seeds, Sugar, Confectionery, Chemicals, Engineering goods, Ceramics and Petro-chemicals. E.I.D.-Parry, with its specialised knowledge, technical know-how and long experience, is geared to play a leading role in national growth. E.I.D.-Parry's marketing organisation, with its after-sales service, is far-flung and dynamic.

**Parry's—pioneers in planned progress**



**E.I.D.-PARRY LIMITED**

*(Incorporated in England. Liability of members is limited)*

Dare House, Madras-1

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## பதினேழாம் அத்தியாயம்

## மாண்டவர் மீள்வதுண்டோ?

இதுவரைக்கும் சுந்தர சோழர் வேறு யாரோ ஒரு மூன்றும் மனிதனைப் பற்றிச் சொல்வது போலச் சொல்லிக் கொண்டு வந்தார். இப்போது தம்முடைய வாழ்க்கையில் நடந்த வரலாருகவே சொல்லத் தொடங்கினர்:—

''என் அருமை மகளே! சாதாரணமாக ஒரு தகப்பன் தன் மகளிடம் சொல்லக்கூடாத விஷயத்தை இன்று நான் உனக்குச் சொல்கிறேன். இதுவரை யாரிடமும் என் மனத்தைத் திறந்து சொல்லாத செய்தியை உன்னிடம் சொல்கிறேன். இந்த உலகத்திலேயே என் நண்பன் அநிருத்தன் ஒருவனுக்குத்தான் இது தெரியும்; அவனுக்கும் முழுதும் தெரியாது. இப்போது என் மனத்தில் நடக்கும் போராட்டம் அவனுக்குத் தெரியாது. ஆனல் உன்னிடம் எல்லாவற்றையும் சொல்லப் போகிறேன். தம்முடைய 'குடும்பத்தில் யாராவது ஒருவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். உன் தாயாரிடம் சொல்ல எனக்கு நா எழாது. உன் தமையனிடமும் தம்பியிடமும் சொல்ல முடியாது. உன்னிடந்தான் சொல்ல வேண்டுமென்று சில காலமாகவே எண்ணியிருந்தேன். அதற்குச் சந்தர்ப்பம் இன்றைக்கு வாய்த்தது. அதற்கு வேண்டிய தைரியமும் இன்றைக்குத்தான் வந்தது. நீ என் நிலையைக் கண்டு சிரிக்க மாட்டாய்; என் மனத்திலுள்ள புண்ணை ஆற்றுவதற்கு முயல்வாய்; என்னுடைய விருப்பம் நிறைவேறவும் உதவி செய்வாய்! — இந்த நம்பிக்கையுடன் உன்னிடம் சொல்கிறேன்.....

''அந்தத் தீவிலிருந்து மரக்கலத்தில் ஏறிப் புறப்பட்டேன். கோடிக்கரை சேர்ந்தேன். என்



பாட்டனார் பராந்தக சக்கரவர்த்தி இந்தத் தஞ்சை அரண்மனையில் அப்போது தங்கியிருக்கிறார் என்று அறிந்து நேராக இங்கே வந்தேன்.

"நான் தஞ்சை வந்து சேர்ந்தபோது பராந்தக சக்கரவர்த்தி மரணத்தை எதிர் நோக்கிக் கொண்டிருந்தார். அவர் உள்ளம் நொந்து போயிருந்தது. நாற்பது ஆண்டு காலத்தில் அவர் நிர்மாணித்த மகாராஜ்யம் சின்னா பின்னம் அடைந்து கொண்டிருந்தது. அவருக்குப் பிறகு பட்டத்தைஅடைய வேண்டியவரான இராஜாதித்தர் தக்கோலப் போரில் மாண்டார். அதே போர்க்களத்தில் படுகாயம்அடைந்த என் தந்தை அரிஞ்சயர் பிழைப்பாரோ, மாட்டாரோ என்ற நிலையில் இருந்தார். கன்னர தேவனுடைய படைகள் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றி முன்னேறிக்



கொண்டு வந்தன. தெற்கே பாண்டியர்கள் தலையெடுத்து வந்தார்கள். இலங்கையில் சோழ சைன்யம் தோல்வியுற்றுத் திரும்பி விட்டது. பல போர்க்களங்களிலும் சோழ நாட்டு வீராதி வீரர்கள் பலர் உயிர் துறந்து விட்டார்கள். இந்தச் செய்திகள் எல்லாம் ஒருமிக்க வந்து முதிய பிராயத்துப் பராந்தக சக்கரவர்த்தியின் உள்ளத்தைப் புண்படுத்தித் துயரக் கடலில் ஆழ்த்தியிருந்தன. இந்த நிலையில் என்னைக் கண்டதும் அவருடைய முகம் மலர்ச்சி அடைந்தது. என் பாட்டனாருக்கு நான் குழந்தையாயிருந்த நாளிலிருந்து என்பேரில் மிக்க பிரியம். என்னை எங்கேயும் அனுப்பாமல் அரண்மனையில் தம்முடனேயே வெகு காலம் வைத்திருந்தார். பிடிவாதம் பிடித்து அவரிடம் விடைபெற்றுக் கொண்டு நான் ஈழ நாட்டுக்குப் போனேன். அங்கிருந்து திரும்பி வந்தவர்களிலே நான்

இல்லை என்று அறிந்ததும் என் பாட்டனாரின் மனம் உடைந்து போயிருந்தது. நான் இறந்து விட்டதாகவும் தெரியவில்லையாதலால் என்னைத் தேடி வரக் கூட்டங் கூட்டமாக ஆட்களை அனுப்பிக் கொண்டிருந்தார்.

''கடைசியில் ஒரு கூட்டம் என்னைக் கண்டு பிடித்தது. நான் தஞ்சை வந்து சேர்ந்ததும், புண்பட்ட அவர் மனத்துக்குச் சிறிது சாந்தி ஏற்பட்டது. அவருடைய அந்திய காலத்தில் வீழ்ச்சியடைந்து வந்த சோழ சாம்ராஜ்யம் மறுபடியும் என்னால் மேன்மையடையும் என்பதாக எப்படியோ அவர் மனத்தில் ஒரு நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. அந்த நம்பிக்கையைச் சோதிடர்கள் வளரச் செய்திருந்தார்கள். அதற்குத் தகுந்தாற் போல், அவருக்குப் புதல்வர்கள் நாலு பேர் இருந்தும், அவருடைய அந்திய காலத்தில் பேரன் நான் ஒருவனே இருந்தேன். சக்கரவர்த்தி இறக்கும் தறுவாயில் என்னை அருகில் அழைத்து உச்சி முகந்து கண்ணீர் பெருக்கினார். ''அப்பனே! எனக்குப் பிறகு உன் பெரியப்பன் கண்டராதித்தன் சிம்மாசனம் ஏறுவான். அவனுக்குப் பிறகு இந்தச் சோழ ராஜ்யம் உன்னை அடையும். உன்னுடைய காலத்திலேதான் மறுபடியும் இந்தச் சோழ குலம் மேன்மையடையப் போகிறது!'' என்று பல முறை அவர் கூறினார். சோழ நாட்டின் மேன்மையை நிலைநாட்டுவதே என் வாழ்க்கையின் லட்சியமாயிருக்க வேண்டுமென்று சொல்லி, அவ்வாறு என்னிடம் வாக்குறுதியும் பெற்றுக் கொண்டார்...

''என் பாட்டனார் என்னிடம் எவ்வளவு பிரியம் வைத்திருந்தாரோ, அவ்வளவு நான் அவரிடம் பக்தி வைத்திருந்தேன். ஆதலின் அவருடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு நடப்பதென்று உறுதி கொண்டேன். ஆனாலும் என் உள்ளத்திலே அமைதி இல்லை. கடல் சூழ்ந்த தீவில் கரடிக்கு இரையாகாமல் என்னைக் காப்பாற்றிய கரையர் குல மகளின் கதி என்ன? சோழ நாட்டுச் சிம்மாசனத்தில் கீழ்க் குலத்தில் பிறந்த ஊமைப் பெண் ஒருத்தி ராணியாக வீற்றிருக்க முடியுமா? அரண்மனை வாழ்வு அவளுக்குத்தான் சரிப்பட்டு வருமா? நாட்டார் நகரத்தார் என்னைப் பார்த்துச் சிரிக்க மாட்டார்களா?.... இந்த எண்ணங்கள் அடிக்கடி தோன்றி என் மனத்தைச் சஞ்சலப்படுத்தின. இது மட்டுமன்று. என் பெரிய தகப்பனார் கண்டராதித்தர் சில காலத்திற்கு முன்புதான் இரண்டாவது கலியாணம் செய்து கொண்டிருந்தார். அவரை மணந்த பாக்கியசாலி மழவரையர் குலமகள் என்பதை நீ அறிவாய். முதல் மனைவிக்குக் குழந்தை இல்லையென்றால், இரண்டாவது மனைவிக்கும் குழந்தை பிறவாது என்பது என்ன நிச்சயம்? பெரியப்பாவுக்கு ஆண் குழந்தை பிறந்தால், இராஜ்யம் எனக்கு எப்படி வரும்? — இதைப் பற்றி ராஜ்யத்தில் சிலர் அப்போதே பேசிக் கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. ஆனால், அத்தகைய சந்தேகம் யாருக்கும் உண்டாகக் கூடாது என்று மகாத்மாவாகிய என் பெரிய தகப்பனார் விரும்பினார் போலும். பராந்தகர் சக்கரவர்த்தி காலமான பிறகு கண்டராதித்தருக்கு இராஜ்ய பட்டாபிஷேகம் நடந்தது. அதே சமயத்தில் எனக்கும் யுவராஜ்ய பட்டாபிஷேகம் நடக்க வேண்டும் என்று என் பெரியப்பா — புதிய சக்கரவர்த்தி — ஏற்பாடு செய்து விட்டார்...

''என் பிரிய மகளே! இன்றைக்கு உன் தம்பி அருள்மொழியின் பேரில் இந்த நாட்டு மக்கள் எப்படிப் பிரியமாயிருக்கிறார்களோ, அப்படி அந்த நாளில் என் பேரில் அபிமானமாயிருந்தார்கள். அரண்மனைக்குள்ளே பட்டாபிஷேகம் நடந்து கொண்டிருந்த போது வெளியிலே ஆயிரக்கணக்கான ஜனங்கள் ஆவலுடன் காத்திருந்தார்கள். புதிதாக முடிசூடிய சக்கரவர்த்தியும் யுவராஜாவும் சேர்ந்தாற் போல் ஜனங்களுக்குக் காட்சி தர வேண்டும் என்று அனைவரும் விரும்பினார்கள். அவ்விதமே பெரியப்பாவும் நானும் இந்த அரண்மனை மேன்மாடத்தின் முன்றிலுக்கு வந்து நின்றோம். கீழே ஒரே ஜன சமுத்திரமாக இருந்தது. அவ்வளவு பேருடைய முகங்களும் மலர்ந்து விளங்கின. எங்களைக் கண்டதும் அவ்வளவு பேரும் குதூகலமடைந்து ஆரவாரித்தார்கள். நாம் இளவரசுப் பட்டம் சூட்டிக் கொண்டது பற்றி இவ்வளவு ஆயிரமாயிரம் மக்கள் குதூகலம் அடைந்திருக்கிறார்களே. அப்படியிருக்க, எங்கேயோ ஒரு கண்ணற்ற தீவில் காட்டின் மத்தியில் வாழும் ஊமைப் பெண்ணைப் பற்றி நாம் கவலைப்படுவது என்ன நியாயம்? இவ்வளவு பேருடைய மகிழ்ச்சி முக்கியமானதா? ஒரே ஒரு ஊமைப் பெண்ணின் வாழ்க்கை முக்கியமானதா?....

''இவ்வாறு எண்ணிக் கொண்டே எங்களை அண்ணாந்து பார்த்தபடி

நின்ற மலர்ந்த முகங்களை ஒவ்வொன்றாகக் கவனித்துக் கொண்டு வந்தேன். அந்த ஜனங்களிலே ஆண்களும் பெண்களும் முதியவர்களும் இளைஞர்களும் சிறுவர் சிறுமிகளும் நின்றார்கள். எல்லோரும் ஒரே களிப்புடன் காணப்பட்டார்கள். ஆனால் திடீரென்று ஒரு முகம், ஒரு பெண்ணின் முகம், சோகம் ததும்பிய முகம், கண்ணீர் நிறைந்த கண்களினால் என்னைப் பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்த முகம், — தெரிந்தது. அத்தனை கூட்டத்துக்கு நடுவில் எப்படி அந்த ஒரு முகம் என் கண்ணையும் கவனத்தையும் கவர்ந்ததென்பதை நான் அறியேன். பிறகு, அங்கிருந்து என் கண்களும் நகரவில்லை; கவனமும் பெயரவில்லை. அந்த முகம் வர வரப் பெரிதாகி வந்தது: என் அருகே அருகே வருவது போலிருந்தது. கடைசியில், அந்தப் பெரிய ஜனத் திரள் முழுதும் மறைந்து, என் அருகில் நின்றவர்கள் எல்லாரும் மறைந்து, அரண்மனை மறைந்து, ஆசார வாசல் மறைந்து, தஞ்சை நகரின் கோட்டை கொத்தளம் மறைந்து, வானும் மண்ணும் மறைந்து, அந்த ஒரு முகம் மட்டும் தேவி பரமேசுவரியின் விசுவரூபத்தைப் போல் என் கண் முன்னால் தோன்றியது. என் தலை சுழன்றது; கால்கள் பலமிழந்தன; நினைவு தவறியது....

''அப்படியே நான் மயங்கி விழுந்து விட்டதாகவும் பக்கத்திலிருந்தவர்கள் தாங்கிப் பிடித்துக் கொண்டதாகவும் பிற்பாடு அறிந்தேன். பட்டாபிஷேக வைபவச் சடங்குகளில் நான் அதிகம் களைத்துப் போய் விட்டதாக மற்றவர்கள் நினைத்தார்கள். ஜனங்களுக்குக் காட்சி அளித்தது போதும் என்று என்னை அரண்மனைக்குள்ளே அழைத்துச் சென்றார்கள். பிறகு எனக்கு நல்ல நினைவு வந்ததும் என் நண்பன் அநிருத்தனைத் தனியாக அழைத்து நான் கண்ட காட்சியைக் கூறினேன். அந்த ஊமைப் பெண்ணின் அடையாளம் கூறி எப்படியாவது அவளைக் கண்டுபிடித்து அழைத்து வர வேண்டும் என்று கட்டளையிட்டேன். தஞ்சை நகரின் மூலைமுடுக்கெல்லாம் தேடியும் அத்தகைய ஊமைப் பெண் யாரும் இல்லையென்று அநிருத்தன் வந்து சொன்னான். என்னுடைய உள்ளத்தின் பிரமையாக இருக்குமென்றும் கூறினான். நான் அவனைக் கோபித்துக் கொண்டு 'இந்த உதவி கூடச் செய்யாவிட்டால் அப்புறம் நீ என்ன சிநேகிதன்?' என்றேன். தஞ்சைக் கோட்டைக்கு வெளியே கடற்கரையை நோக்கிச் செல்லும் பாதைகளில் ஆள் அனுப்பித் தேடும்படி சொன்னேன். அப்படியே பல வழிகளிலும் ஆள்கள் சென்றார்கள். கடற்கரை வரையில் போய்த் தேடினார்கள். கோடிக்கரைக்குப் போனவர்கள் அங்கேயுள்ள கலங்கரை விளக்கக் காவலன் வீட்டில் ஓர் ஊமைப் பெண் இருப்பதாகக் கண்டு பிடித்தார்கள். அவள் பித்துப் பிடித்தவள் போலத் தோன்றினாளாம். எவ்வளவோ ஜாடைமாடைகளினால் அவளுக்கு விஷயத்தைத் தெரிவிக்க முயன்றது பயன்படவில்லையாம். அவர்களுடன் தஞ்சைக்கு வருவதற்கு அடியோடு மறுத்து விட்டாளாம். இந்தச் செய்தியை அவர்கள் கொண்டு வந்தவுடனே, இன்னது செய்வதென்று தெரியாமல் மனங் கலங்கினேன். இரண்டு நாள் அந்தக் கலக்கத்திலேயே இருந்தேன். ஆன மட்டும் அவளை மறந்துவிடப் பார்த்தும் இயலவில்லை. இரவும் பகலும் அதே நினைவாயிருந்தது. இரவில் ஒரு கணங் கூடத் தூங்கவும் முடியவில்லை. பிறகு அநிருத்தனையும் அழைத்துக் கொண்டு கோடிக்கரைக்குப் புறப்பட்டேன். குதிரைகளை எவ்வளவு வேகமாகச் செலுத்தலாமோ அவ்வளவு வேகமாகச் செலுத்திக் கொண்டு போனேன். போகும் போது என் மனக் கலக்கம் இன்னும் அதிகமாயிற்று. அந்த ஊமைப் பெண்ணை அங்கே கண்டு பிடித்தால், அப்புறம் அவளை என்ன செய்வது என்று எண்ணிய போது மனம் குழம்பியது. தஞ்சைக்கோ பழையாறைக்கோ அழைத்துப் போய் 'இவள் என் ராணி' என்று சொல்லுவதா? அவ்வாறு நினைத்த போது என் உள்ளமும் உடலும் குன்றிப் போய் விட்டன.

''என் செல்வக் குமாரி! அந்த நாளில் நான் மேனி அழகில் நிகரற்றவன் என்று வேண்டாத பிரபலம் ஒன்று எனக்கு ஏற்பட்டிருந்தது. அதை ஒரு புகழாகவே நான் நினைக்கவில்லை. ஆயினும் மற்றவர்கள் அதைப் பற்றி ஓயாது பேசினார்கள். என் பாட்டனாரின் பெயராகிய 'பராந்தகன்' என்னும் பெயரை எனக்கு வைத்திருந்தும், அது அடியோடு மறையும்படி செய்து 'சுந்தர சோழன்' என்ற பெயரைப் பிரபலப்படுத்தி விட்டார்கள். அப்படி அனைவராலும் புகழப்பட்ட நான் நாகரிகம் இன்னதென்று தெரியாத ஓர் ஊமைப் பெண்ணை எப்படி அரண்மனைக்கு அழைத்துப் போவேன்? இல்லையென்

ரூல், அவளை என்ன செய்வது? — இப்படிப் பலவாறு எண்ணிக் குழம்பிய மனத்துடன் கோடிக்கரை சேர்ந்தேன். அந்த மகராஜி எனக்குக் கஷ்டம் எதுவும் இல்லாமல் செய்து விட்டாள். அங்கே நான் அறிந்த செய்தி என்னை அப்படியே ஸ்தம்பித்துப் போகும்படி செய்து விட்டது. நாங்கள் அனுப்பிய ஆள்கள் திரும்பிச் சென்ற மறுநாள் அந்தப் பெண் கலங்கரை விளக்கின் உச்சியில் ஏறினளாம். அன்று அமாவாசை. காற்று பலமாக அடித்தது. கடல் பொங்கிக் கொந்தளித்து வந்து கலங்கரை விளக்கைச் சூழ்ந்து கொண்டது. அந்தப் பெண் சிறிது நேரம் கொந்தளித்த அலைகடலைப் பார்த்துக் கொண்டே நின்றாளாம். அப்படி அவள் அடிக்கடி நிற்பது வழக்கமாதலால் யாரும் அதைப் பொருட்படுத்தவில்லையாம்! திடீரென்று 'வீல்' என ஒரு சத்தம் அலைகடலின் முழக்கத்தையும் மீறிக் கொண்டு கேட்டதாம். பிறகு, அவளைக் காணும்! பெண் உருவம் ஒன்று விளக்கின் உச்சியிலிருந்து கடலில் தலைகீழாக விழுந்ததை இரண்டொருவர் பார்த்தார்களாம். படகுகளைக் கொண்டு வந்து ஆனமட்டும் தேடிப் பார்த்தும் பயன் படவில்லை. கொந்தளித்துப் பொங்கிய கடல் அந்தப் பெண்ணை விழுங்கி விட்டது என்றே தீர்மானிக்க வேண்டியிருந்ததாம்....

''இந்தச் செய்தியைக் கேட்டதும் என் நெஞ்சில் ஈட்டியினால் குத்துவது போன்ற வலியும் வேதனையும் உண்டாயின. ஆனால் சற்று நேரத்துக்கெல்லாம் ஒருவித அமைதியும் உண்டாயிற்று. அவளை என்ன செய்வது என்ற கேள்வி இனி இல்லை. அதைப் பற்றி யோசித்து மனத்தைக் குழப்பிக் கொள்ள வேண்டியதுமில்லை!....

''துன்பமும் அமைதியும் கலந்த இந்த விசித்திர வேதனையுடன் தஞ்சைக்குத் திரும்பினேன். இராஜ்ய காரியங்களில் மனத்தைச் செலுத்தினேன். போர்க்களங்களுக்குச் சென்றேன். உன் தாயை மணந்து கொண்டேன். வீரப் புதல்வர்களைப் பெற்றேன். உன்னை என் மகளாக அடையும் பாக்கியத்தையும் பெற்றேன்....

''ஆனாலும், மகளே! செத்துப் போன அந்தப் பாவியை என்னால் அடியோடு மறக்க முடியவில்லை. சிற்சில சமயம் என் கனவில் அந்தப் பயங்கரக் காட்சி, — நான் கண்ணால் பாராத அந்தக் காட்சி, — தோன்றி என்னை வருத்திக் கொண்டிருந்தது. கலங்கரை விளக்கின் உச்சியிலிருந்து ஒரு பெண் உருவம் தலை கீழாகப் பாய்ந்து அலைகடலில் விழும் காட்சி என் கனவிலும் கற்பனையிலும் தோன்றிக் கொண்டிருந்தது. கனவில் அந்தப் பயங்கரக் காட்சியைக் காணும்போதெல்லாம் நான் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருப்பேன். பக்கத்தில் படுத்திருப்பவர்கள், 'என்ன? என்ன?' என்று கேட்பார்கள். உன் தாயார் எத்தனையோ தடவை கேட்டதுண்டு. ஆனால் நான் உண்மையைக் கூறியதில்லை. 'ஒன்றுமில்லை' என்று சில சமயம் சொல்வேன். அல்லது போர்க்களப் பயங்கரங்களைக் கற்பனை செய்து கூறுவேன். நாளடைவில் காலதேவனின் கருணையினால் அந்தப் பயங்கரக் காட்சி என் மனத்தைவிட்டு அகன்றது; அவளும் என் நினைவிலிருந்து அகன்றாள்; அகன்று விட்டதாகத்தான் சமீப காலம் வரையில் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் உயிரோடு இருப்பவர்களைக் காட்டிலும் செத்துப் போனவர்கள் அதிகக் கொடுமைக்காரர்கள் என்று தோன்றுகிறது. மகளே! ஊமைச்சியின் ஆவி என்னை விட்டு விடவில்லை. சில காலமாக அது மீண்டும் தோன்றி என்னை வதைக்க ஆரம்பித்திருக்கிறது! என் மகளே! மாண்டவர்கள் மீண்டு வருவார்கள் என்று நீ நம்புகிறாயா....?''

இவ்விதம் சொல்லிவிட்டுச் சுந்தர சோழர் தம் பார்வையை எங்கேயோ தூரத்தில் செலுத்தி வெறித்துப் பார்த்தார். அவர் பார்த்த திக்கில் ஒன்றுமே இல்லைதான்! ஆயினும் அவருடைய உடம்பு நடுங்குவதைக் குந்தவை கண்டாள். எல்லையற்ற இரக்கம் அவர் பேரில் அவளுக்கு உண்டாயிற்று. கண்களில் நீர் ததும்பியது. தந்தையின் மார்பில் தன் முகத்தைப் பதித்துக் கொண்டு கண்ணீர் விட்டாள். அதனால் அவருடைய நடுக்கமும் குறைந்ததாகத் தோன்றியது. பிறகு தந்தையை நிமிர்ந்து நோக்கி, ''அப்பா! இந்தப் பயங்கரமான வேதனையைப் பல வருஷ காலம் தங்கள் மனத்திலேயே வைத்துக் கொண்டு கஷ்டப்பட்டிருக்கிறீர்கள். அதனாலேதான் உங்கள் உடம்பு சீர்குலைந்து விட்டது. இப்போது என்னிடம் சொல்லி விட்டீர்கள் அல்லவா? இனிமேல் தங்கள் உடம்பு சரியாகப் போய் விடும்'' என்றாள்.

சுந்தர சோழர் அதைக் கேட்டுச் சிரித்த சிரிப்பின் ஒலியில் வேதனை

யுடன்கூட அவநம்பிக்கையும் கலந்திருந்ததேன்? அவர் கூறினார்:

''குந்தவை! நீ நம்பவில்லை. மாண்டவர்கள் மீண்டு வருவார்கள் என்று நீ நம்பவில்லை. ஆனாலும் அதோ அந்தத் தூணுக்குப் பக்கத்தில், குத்து விளக்கின் பின்னால், அந்தப் பாவியின் ஆவி நேற்று நள்ளிரவில் நின்றது. என் கண்ணாலேயே பார்த்தேன். அதை எப்படி நம்பாமலிருக்க முடியும்? நான் கண்டது வெறும் பிரமை என்றால், உன் தோழியைப் பற்றி என்ன சொல்வாய்? அவள் எதையோ பார்த்துக் கேட்டதனால்தானே நினைவு தப்பி விழுந்தாள்! அவளை அழைத்து வா, குந்தவை! நானே நேரில் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன்!'' என்று சுந்தர சோழர் பரபரப்புடன் கூறினார்.

''அப்பா! வானதி ஒரு பயங்கொள்ளிப் பெண்! கொடும்பாளூர் வீர வேளிர் குலத்தில் இவள் எப்படிப் பிறந்தாளோ, தெரியவில்லை. இருட்டில் தூணைப் பார்த்தாலும், அவள் அலறி அடித்துக் கொண்டு மயக்கமாய் விழுவாள். அவளைக் கேட்பதில் யாதொரு பயனுமில்லை. அவள் ஏதும் பார்த்திருக்கவும் மாட்டாள்; கேட்டிருக்கவும் மாட்டாள்.''



''அப்படியா சொல்கிறாய்? அவள் போனால் போகட்டும். நான் சொல்ல வேண்டியது மிச்சத்தையும் கேள்! மாண்டவர்கள் மீண்டு வருவார்கள் என்பதில் எனக்கு வெகுகாலம் நம்பிக்கை இல்லாமல் தானிருந்தது. அப்படிப்பட்ட தோற்றம் என்னுடைய வீண் மனப் பிரமை என்றே நானும் எண்ணியிருந்தேன். காவேரி நதியில் நாம் எல்லாருமாக ஓடத்தில் போய்க்கொண்டிருந்தபோது குழந்தை அருள்மொழிவர்மன் திடீரென்று காணாமற்போனது உனக்கு நினைவிருக்கிறதல்லவா? நாம் எல்லாரும் திகைத்தும் தவித்தும் நிற்கையில் ஒரு பெண்ணரசி பொன்னி நதி வெள்ளத்திலிருந்து குழந்தையை எடுத்துத் தூக்கிக் கொடுத்தாள். குழந்தையை மற்றவர்கள் வாங்கிக் கொண்டதும் அவள் மறைந்து விட்டாள். இதைப் பற்றி நாம் எவ்வளவோ தடவை பேசியிருக்கிறோம். நீ மறந்திருக்க முடியாது. நீங்கள் எல்லாரும் காவேரி யம்மன்தான் குழந்தையைக் காப்பாற்றியதாக முடிவு கட்டினீர்கள். ஆனால் என் கண்ணுக்கு என்ன தோன்றியது தெரியுமா? அந்த வலைஞர் குல மகள் — ஊமைச்சிதான் — குழந்தையை எடுத்துக் கொடுத்ததாகத் தோன்றியது. அன்றைய தினமும் நான் நினைவிழந்து விட்டேன் என்பது உனக்கு ஞாபகம் இருக்கிறதா? குழந்தைக்கு நேர்ந்த அபாயத்தை முன்னிட்டு நான் நினைவிழந்தேன் என்று எல்லாரும் எண்ணினார்கள். ஆனால் உண்மை அதுவன்று. இத்தனை நாள் கழித்து உனக்குச் சொல்கிறேன். குழந்தையை எடுத்துக் கொடுத்த பெண்ணுருவம் அவளுடைய ஆவி உருவம் என்று எனக்குத் தோன்றியபடியால் தான் அப்படி மூர்ச்சையடைந்தேன்...

''மகளே! உன் தமையனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டிய தினம் நினைவிருக்கிறதா? அன்று பட்டாபிஷேகம் நடந்த பிறகு ஆதித்த கரிகாலன் அந்தப்புரத்துக்குத் தாய்மார்களிடம் ஆசி பெறுவதற்காக வந்தான் அல்லவா? அவனுக்குப் பின்னால் நான் வந்தேன். அதே ஊமைச்சியின் ஆவி அங்கே பெண்களின் மத்தியில் நின்று கரிகாலனைக் கொடூரமாக உற்றுப் பார்த்ததைக் கண்டேன். மீண்டும் ஒரு தடவை

பிரக்ளை இழந்தேன். பிறகு யோசித்த போது அந்தச் சம்பவத்தைக் குறித்து எனக்குச் சந்தேகம் உண்டாயிற்று. அப்படி அவன் கரிகாலனைக் கொடூர மாகப் பார்க்க வேண்டிய அவசியம் என்ன என்று ஐயுற்றேன். அதுவும் என் சித்தப் பிரமையின் தோற்றமா யிருக்க லாம் என்று எண்ணினேன். ஆனால், மகளே! இந்தத் தடவை தஞ்சைக்கு வந்த பிறகு அந்தச் சந்தேகமெல்லாம் தீர்ந்து விட்டது. ஒரு காலத்தில்,—அவள் உயிரோடிருந்த காலத்தில், — அவள் முகத்தைப் பார்த்து அவள் மனத்தி லுள்ளதைத் தெரிந்து கொள்வேன்; அவள் உதடு அசைவதைப் பார்த்து அவள் சொல்ல விரும்புவது இன்ன தென்று தெரிந்து கொள்வேன். அந்தச் சக்தியை மீண்டும் நான் பெற்றுவிட் டேன் குந்தவை! நாலைந்து முறை நள் ளிரவில் அவள் என் முன்னால் தோன்றி எனக்கு எச்சரிக்கை செய்து விட்டாள். 'என்னைக் கொன்றாயே! அதை நான் மன்னிக்கிறேன். ஆனால் மீண்டும் பாவம் செய்யாதே! ஒருவனுக்குச் சேர வேண் டிய இராஜ்யத்தை இன்னொருவனுக்குக் கொடுக்காதே!' என்று அவள் சொல்வ தைப் புரிந்து கொண்டேன். அவளுக்குப் பேசும் சக்தி வந்து வாயினால் பேசினால் எப்படித் தெரிந்து கொள்வேனோ அவ் வளவு தெளிவாகத் தெரிந்து கொண் டேன். மகளே! அதை நிறைவேற்றி வைக்க எனக்கு நீ உதவி செய்ய வேண் டும். சாபமுள்ள இந்த இராஜ்யம் — இந்தச் சோழ சிம்மாசனம் — என் புதல் வர்களுக்கு வேண்டாம்! இதை மது ராந்தகனுக்குக் கொடுத்து விடலாம்...''

கிறேன். என் புதல்வர்களும் அத் தகைய பாவத்துக்கு ஏன் உள்ளாக வேண்டும்? ஆதித்தனுக்கும் இந்த ராஜ்யம் வேண்டாம்; அருள்மொழிக் கும் வேண்டாம். இந்த ராஜ்யத்துடன் வரும் சாபமும் வேண்டாம். நான் உயிரோடிருக்கும்போதே மதுராந்தக னுக்குப் பட்டம் கட்டிவிட வேண்டும். அதன் பிறகு ஆதித்தன் காஞ்சியில் கட்டியிருக்கும் பொன் மாளிகையில் சென்று நான் மன நிம்மதியோடு வசிப்பேன்...''

''அப்பா! பெரிய பிராட்டி இதற்குச் சம்மதிக்க வேண்டாமா?''

''மகளே! அதற்காகத்தான் உன் உத வியை நாடுகிறேன். எந்தக் காரணம் சொல்லியாவது என் பெரியம்மையை இங்கே வரும்படி செய். ஆகா! எவ் வளவோ தெரிந்த பரம ஞானியான அந்த மூதாட்டிக்கு இந்தத் தர்ம



குந்தவை அப்போது குறுக்கிட்டு, ''அப்பா! இது என்ன சொல்கிறீர்கள்? நாடு நகர மெல்லாம் ஒப்புக் கொண்டு முடிந்து போன காரியத்தை இப்போது மாற்ற வேண்டிய அவசியம் என்ன? தாங்கள் மாற்றினாலும் உலகம் ஒப்புக் கொள்ளுமா?'' என்று கேட்டாள்.

''உலகம் ஒப்புக் கொண்டால் என்ன? ஒப்புக் கொள்ளாவிட்டால் என்ன? தர்மம் இன்னதென்று தெரிந்து செய்ய வேண்டியது என் கடமை. நான் இந்தச் சோழ ராஜ்யத்துக்கு இளவரசனாகவும் பிறகு சக்கரவர்த்தியாகவும் முடி சூட்டிக் கொண்டபோதே என் மனம் நிம்மதியாயில்லை. என் மனச்சாட்சி என்னை உறுத்தியது. மூத்தவரின் மகன் உயிரோடிருக்கும்போது இளையவரின் மக னாகிய நான் பட்டத்துக்கு வந்ததே முறையன்று. அந்தப் பாவத்தின் பலனை இன்று நான் அனுபவிக்

நியாயம் ஏன் தெரிய வில்லை? என்னை ஏன் இந்தப் பாவம் செய்யும்படி ஏவினார்? அல்லது அவருடைய சொந் தப் பிள்ளையின் பேரிலேதான் அவ ருக்கு என்ன கோபம்? தாயின் இயற் கைக்கே மாறான இந்தக் காரியத்தில் அவருக்கு ஏன் இவ்வளவு பிடிவாதம்? மதுராந்தகன் ஏதோ சிவ பக்தியில் ஈடுபட்டுச் சந்நியாசியாகப் போகிறேன் என்று சொல்லிக் கொண்டிருந்தபோது அதற்கு நியாயம் உண்டு. இப்போது அவனுக்கே இராஜ்யம் ஆளும் ஆசை வந்திருக்கும்போது இன்னொருவனுக்கு எப்படிப் பட்டம் கட்டலாம்?''

''அப்பா! இராஜ்யம் ஆள ஆசை இருக்கலாம்; அதற்குத் தகுதி இருக்க வேண்டாமா?''

''ஏன் தகுதி இல்லை? மகானாகிய கண்டராதித்தருக்கும் மகா ஞானியான மழவரையர் மகளுக்கும் பிறந்த மக

னுக்கு எப்படித் தகுதி இல்லாமற் போகும்?''

''தகுதி இருக்கட்டும். இராஜ்யத்தின் குடிகள் அதற்கு ஒப்புக் கொள்ள வேண்டாமா?''

''குடிகளுடைய அபிப்பிராயத்தைக் கேட்பதாயிருந்தால் அவர்கள் உன் தம்பிக்கு உடனே பட்டம் கட்டிவிட வேண்டும் என்பார்கள். அது நியாயமா? அருள்மொழிதான் அதை ஒப்புவானா?... அதெல்லாம் வீண் யோசனை மகளே! எப்படியாவது உன் பெரிய பாட்டியை இங்கே சீக்கிரம் வரும்படி செய்! நான் யமனோடு போராடிக் கொண்டிருக்கிறேன் என்று எழுதி அனுப்பு; என்னை உயிரோடு பார்க்க வேண்டுமானால் உடனே புறப்பட்டு வரவேண்டுமென்று சொல்லி அனுப்பு...''

''அது ஒன்றும் அவசியமில்லை அப்பா! தஞ்சைத் தளிக்குளத்தார் கோயிலுக்குத் திருப்பணி செய்ய வேண்டுமென்ற விருப்பம் பெரிய பிராட்டிக்கு இருக்கிறது. அதைக் குறிப்பிட்டு இச்சமயம் வரும்படி எழுதி அனுப்புகிறேன். அதுவரை தாங்கள் அலட்டிக் கொள்ளாமல் பொறுமையாயிருங்கள் அப்பா!''

இவ்விதம் கூறித் தந்தையிடம் விடைபெற்றுக் கொண்டு குந்தவை தன் இருப்பிடத்துக்குச் சென்றாள். வழியில் அன்னை வானமா தேவியைச் சந்தித்தாள். ''அம்மா! இனிமேல் என் தந்தையை ஒரு கண நேரம் கூட விட்டுப் பிரியாதீர்கள்! மற்றவர்கள் போய், செய்ய வேண்டிய பூஜைகளைச் செய்யட்டும்!'' என்றாள்.

குந்தவையின் உள்ளத்தில் சில காலமாக ஏற்பட்டிருந்த ஐயங்கள் இப்போது கொஞ்சம் தெளிவு பெறத் தொடங்கியிருந்தது. கன இருட்டாயிருந்த இடங்களில் கொஞ்சம் வெளிச்சம் தெரிய ஆரம்பித்திருந்தது. தன் தந்தைக்கும் சகோதரர்களுக்கும் விரோதமாக ஏதோ ஒரு பயங்கரமான மந்திர தந்திர சூழ்ச்சி நடைபெற்று வருகிறது என்பதை அவள் அறிவு நன்கு உணர்த்தியது. ஆனால் அது எத்தகைய சூழ்ச்சி, எப்படி எப்படியெல்லாம் இயங்குகிறது என்பதை முழுதும் அவளால் அறிந்து கொள்ள முடியவில்லை. சோழ மகாராஜ்யத்துக்கும் அந்த ராஜ்யத்துக்குத் தன் சகோதரர்கள் பெற்றுள்ள உரிமைக்கும் பேரபாயம் ஏற்பட்டிருக்கிறதென்பதை அவள் உணர்ந்தாள். அந்த அபாயத்திலிருந்து அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பு பெண்பாலாகிய தன்மீது சுமந்திருக்கிறதாகவும் நம்பினாள். **(தொடரும்)**

## சந்தா நேயர்களுக்கு...

ஒவ்வொரு கல்கி இதழும் குடும்பத்தில் உள்ள நாலைந்து பேர்களால் படிக்கப்படுவதுடன் பக்கத்து வீட்டிலும் எதிர் வீட்டிலும் உள்ளவர்களையும் மகிழ்விக்கிறது.

பல பேர்கள் கல்கியைப் படிக்கும்போது அது நைந்து போகாமல் பத்திரமாகப் பாதுகாக்க உதவும் வகையில் உயர்ரக பிளாஸ்டிக் மேலட்டை ஒன்று தயாரித்திருக்கிறோம். இந்தப் பிளாஸ்டிக் அட்டையை ஓரிதழிலிருந்து அடுத்த கல்கி இதழுக்கு மாற்றிக் கொள்ளலாம். கல்கியின் ஆதரிச தெய்வமான விநாயகப் பெருமானின் சிறு திருவுருவத்தைத் தாங்கி அழகுறப் பொலியும் இம் மேலட்டையைக் கல்கி காரியாலயத்துக்கு ஓராண்டுச் சந்தா ரூபாய் இருபதை அனுப்பி வைப்பவர்கள் இலவசமாகப் பெறலாம்.

இச் சலுகை ஏப்ரல் முதல் தேதியிலிருந்து தொடங்கி மே இறுதி வரை நீடிக்கும். இக் கால கெடுவுக்குள் ஏற்கெனவே சந்தாதாரர்களாக உள்ளவர்களும் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளலாம். அவர்கள் சந்தா எந்த இதழுடன் முடிகிறதோ அந்த இதழிலிருந்து ஓராண்டுக்குச் சந்தா நீடிக்கப்படும்.

மேலே குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் கல்கி காரியாலயத்துக்கு ஓராண்டுச் சந்தாவான ரூபாய் இருபதை அனுப்பி வைக்கும் நேரடி சந்தாதாரர்களுக்கு மட்டுமே இந்தச் சலுகை உண்டு. மற்றவர்களுக்கு இந்தப் பரிசுத் திட்டத்தை நீடிக்க இயலாததற்கு வருந்துகிறோம். பிளாஸ்டிக் மேலுறையைத் தனியே விற்பதற்கும் இல்லை.

கல்கி நேயர்கள் இந்த அரிய வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் என நம்புகிறோம். **மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை - 31** என்ற விலாசத்துக்குச் சந்தா அனுப்ப வேண்டும்.

# வெளிநாட்டிலிருந்து இரப்பும் இல்லை – இரவலும் இல்லை

இந்தியாவின் சொந்தம்
இந்தியாவின் பெருமை

## நவீன விஞ்ஞான ஆராய்ச்சியின் படைப்பு

புதிய பாக்கிங்கில்

# கோகோ மால்டீன்

பூரண சத்துணவு

## கோகோவும் தேனும் மிகுந்தது

ஒரு
**புதிய**
ருசியும் மணமும்
கூடியது




**இப்பொழுது**
அதிக ஊட்ட
பொருள்களுடன்
கூடியது






கோகோ மால்டீன் புரதம், கார்போ ஹைட்ரேட், தாது உப்புக்கள், விசேஷ வைட்டமின்கள் இவைகளுடன் கூடியது. கோகோ, சுத்தமான தேன், வெண்ணெ, சிறந்த பார்லி மால்ட், ஏடு மிகுந்த பால், மற்றும் குளுகோஸ் சேர்ந்து கோகோ மால்டீனை இளைஞர் முதியோர் அனைவருக்கும் எக்காலத்திற்கும் ஏற்ற சிறந்த உணவாக ஆக்குகிறது. இது பானங்களில் சிறந்தது; ருசியிலும் மணத்திலும், உணவு சத்திலும் சிறந்தது. சிக்கனமானதும் கூட...

**இலவசம்**
ஒரு ஜோடி
பிக்னிக் டம்ளர்கள்
ஒவ்வொரு
450 கிராம் டின்
கோகோ மால்டீன்
சரக்குள்ளவரை கொடுக்கப்படும்



சூடோ குளிரோ கோகோ மால்டீன் சிறப்பானது

**கோகோ மால்டீன் லபாரேடரீஸ்**

உரிமையாளர் : ட்ரேட் விங்ஸ் பிரைவேட் லிமிடெட்.
46 பூசா ரோட், புது டில்லி-5

# ஞான ஒளி

## கே. சுந்தரம்

(நல்லசிவமும் வெங்கிட்டுவும் வந்ததும் மேரி அங்கிருந்து அகன்று விடுகிறாள்.)

**லாரன்ஸ்:** வணக்கம். நீங்க யாரு?

**நல்லசிவம்** (தன் சகபாடியைக் காட்டி) இவர்தான் வெங்கிட்டுன்னு இந்த ஊர் பஞ்சாயத்துப் போர்டு பிரசிடெண்ட். எலெக்ஷனுக்கு அடிக்கடி நிற்பார். ஆனா ஜெயிக்கணும்னு என்னிக்குமே ஆசைப்பட்டது கிடையாது.

**வெங் :** (தன் சகபாடியைக் காட்டி): இவர்தான் நல்லசிவம். இவர் இந்த ஊர் கோவாபரேடிவ் ஸ்டோர்ஸ் சேர்மன்; செகரட்டரி. நல்ல துட்டு. அடிக்கடி எம். எல். ஏ. எலெக்ஷன்லே பல தொகுதிகளிலே நின்றவர். இவருக்கே ஜயிக்கணும்னு ஆசை இருந்தாலும் ஜனங்க இவரை ஜயிக்க விடறதில்லே.

**நல்ல :** மொத்தத்தில் பொதுஜன சேவையே எங்க உயிர் மூச்சு!

**வெங்:** அதுவே நாங்க செய்யற தொண்டு.

(இருவரும் ஒருவரைப் பார்த்து ஒருவர் ஜாடை செய்து கொள்கிறார்கள். நல்லசிவம் மாலையைப் பெட்டியிலிருந்து எடுத்து மற்றவரிடம் தருகிறார்.)

**நல்ல:** சொற்பொழி! சொற்பொழி!

**வெங்** (சரிகை மாலையைக் கையில் பிடித்துக் கொண்டு): மாண்புமிகு அதிகாரியே! வருக. உங்கள் வருகைக்காக வருந்துகிறோம்!.... இல்லே, இல்லே! வரவேற்கிறோம்! இந்த ஜரிகை மாலையை எங்கள் சார்பாகப் போடுகிறோம்.

(அடிக்கடி இப்படிப் பேசி மாலை போட்டு அனுபவப்பட்ட பாணியில் வெங்கிட்டு லாரன்ஸுக்கு மாலை போட, அதை லாரன்ஸிடமிருந்து திரும்பிப் பெற நல்லசிவம் பெட்டியை நீட்டுகிறார். லாரன்ஸ் பேசிய படியே ஏதோ ஞாபகமாக மாலையைப் பெட்டியில் போட நல்லசிவம் அதைப் பத்திரப்படுத்தித் தாமே வைத்துக் கொள்கிறார்.)

**லாரன்ஸ்:** பதவிக்குப் போட்டி போட்டு ஜெயிக்காமல் எப்படி நீங்க சேவை செய்ய முடியும்? சேவை செய்யணும்னு அதுக்குப் பொறுப்பான ஒரு பதவி தேவையில்லையா?

**நல்ல:** எங்க சேவைக்குப் பதவியே தேவையில்லே. நான் எலெக்ஷனுக்கு நிக்கற போதே ஒரு பணக்காரப் புள்ளியாப் பிடிச்சு இவர் நிக்க வைச்சுடுவார். போட்டி அதிகமாயிடுச்சுன்னு எப்படியும் பணத்தைக் குடுத்து ஒருத்தர் ரெண்டு பேரை வாபஸ் பெறச் சொல்லுவாங்க இல்லையா? அப்போ அந்த ஒருத்தர் ரெண்டு பேர்லே நான் ஒருத்தர்.





"அதோ... அந்த மெழுகு வர்த்திக்கு என்னைவிட முப்பது வயசு கூடவே ஆயிடுச்சு!"

**வெங்:** நான் அந்த இன்னொருத்தர்! சார்! வாங்கின பணத்துக்கு வஞ்சனையில்லாம எங்க ஓட்டை யார் அதிகமாப் பணந் தராங்களோ அவங்களுக்குப் போட்டுடுவோம். இதனாலே எங்களுக்கு மட்டுந்தான் லாபம்னு நீங்க நினைக்கலாம். நாங்களும் பொதுஜனங்களிலே இருவர்தானே! எங்களுக்குச் சேவை செஞ்சுக்கிறதுகூட பொதுஜன சேவைதானே!

**நல்ல:** எலெக்ஷன் ஆனப்புறம் நாங்க சும்மா கிடைச்ச பணத்தை எண்ணிக்கிட்டு உட்கார்ந்திருக்க மாட்டோம். மறுபடியும் இடைத் தேர்தல் வரதுக்கு ஏற்பாடு பண்ணுவோம். எப்பிடின்னு....

**வெங்:** அதை நான் சொல்றேன்.....ஒரு சாமானிய மொட்டைக் கடிதாக! தேர்தலிலே ஜயித்தவரைப் பற்றி மேலிடத்துக்குப் 'பணங் குடுத்துத்தான் ஜயித்தார்'னு.... நாங்க எழுதறதென்னவோ மொட்டை பெட்டிஷன்தான். என்றாலும் உண்மையைத் தான் எழுதுவோம்!

வழியிலே இந்த ஊர் கஷ்ட காலம் ஊரை விட்டுப் போவதைப் பார்க்கலே?

**நல்ல:** பழைய இன்ஸ்பெக்டரைச் சொல்றாரு! நாங்கதான் அவர் மேலே புகார் செய்து மொட்டைக் கடிதாக எழுதிப் போட்டோம்.

**லாரன்ஸ்:** அப்படியா? ஏன்?

**வெங்:** அந்த இன்ஸ்பெக்டர் புகார் செய்தால் நடவடிக்கை எடுக்கவேமாட்டார் சார்! அதனால்தான்! பாருங்க, என் பையன் இந்த ஊர்ப் பள்ளிக்கூடத்தில் அஞ்சாங் கிளாஸ் படிக்கிறான்.

**நல்ல:** பல வருஷங்களா...!

**வெங்:** அட கொஞ்சம் வீக்...

**நல்ல:** படிப்பில் மட்டும்தான் வீக்; உடம்பு நல்லா தடிமனுத்தான் இருக்கு.

**வெங்:** ஹெட்மாஸ்டரை மிரட்டிப் பையனை பாஸ் போடச் சொல்லுங்கனு அந்த இன்ஸ்பெக்டர்கிட்டே சொன்னேன். மாட்டேனுட்டார் ஸார்! அவ்வளவுதான்...



"மாண்புமிகு அதிகாரியே வருக... உங்கள் வருகைக்காக வருந்துகிறோம்! .... இல்லை.. இல்லை... வரவேற்கிறோம்! ......"

**லாரன்ஸ்:** ஆஹா! இப்ப என்னை எதுக்குப் பார்க்க வந்தீங்க?

**நல்ல:** ஊருக்கு ஒரு பெரிய உத்தியோகஸ்தர் புதிசா வந்திருக்காருன்னு உடனே அவருக்கு ஜரிகை மாலை போட்டு மரியாதை செய்யறது ஊர் பெரிய மனுஷங்க வழக்கமில்லையா?

**வெங்:** நாங்க இந்த ஊர் பெரிய மனுஷங்க இல்லையா? பார்க்கப் போனால் நீங்க இந்த ஊருக்கு மாற்றலாகி வந்ததுக்கே நாங்கதான் காரணம். நீங்க வருகிறபோது

**நல்ல:** புகார் மனு பறந்தது! மொட்டை பெட்டிஷன்தான்! ''இன்ஸ்பெக்டர் ஹெட்மாஸ்டரை மிரட்டித் தம் பையனுக்குப் பாஸ் போடச் சொன்னார்'' அப்படின்னு. அவ்வளவுதான்! அந்த இன்ஸ்பெக்டர் மாற்றலாகிப் போயிட்டார்!

**வெங்:** ஹெட்மாஸ்டரையும் விடலையே! 'இன்ஸ்பெக்டருடைய பையனுக்குப் பாஸ் போட இன்ஸ்பெக்டர்கிட்டேயே ஹெட்மாஸ்டர் பணம் கேட்டார்'னு பள்ளி நிர்வாகிகளுக்கு ஒரு பெட்டிஷன்....



" இங்கே பேசமாட்டாங்க... அதுக்காக வேறே இடமிருக்கு.. "

**நல்ல:** மொட்டை பெட்டிஷன்...!

**வெங்:** சம்பந்தப்பட்ட அதிகாரிங்க வந்தாங்க. விசாரணை நடந்தது. முக்கியமான சாட்சி ரெண்டு பேர். நாங்கதான். முடிவிலே ஹெட்மாஸ்டரும்...

**லாரன்ஸ்:** மாற்றலாகிப் போயிட்டாரா?

**நல்ல:** இல்லே. சீட்டே கிழிஞ்சுடுத்து! உங்களுக்குப் புரியறதோ இல்லேயோ? இந்த மொட்டைப் பெட்டிஷனுக்கு இருக்கிற மதிப்பு கையெழுத்துப் போட்ட மனுக்களுக்குக் கிடையாது. நாங்க மட்டும் பெரிய சர்க்கார் அதிகாரிகளாக இருந்தால் எங்க காரியாலயத்திலே யிருந்து போகிற கடிதங்களிலே கையெழுத்தே இருக்கக் கூடாதுன்னு உத்தரவு போடுவோம்!

**வெங்:** அந்த உத்தரவிலேயும் கையெழுத்து இருக்காது! கரன்ஸி நோட்டிலே நாங்க கையெழுத்துப் போட வேண்டிய ஒரு பதவிக்கு வந்தால்...நோட்டிலேயும் கையெழுத்து இல்லாமல்தான் அச்சிடுவோம். கேட்டா நோட்டிலே இடம் இல்லே என்போம்!

**நல்ல:** அது சரி! கையெழுத்துப் போட்ட நோட்டுகள் மட்டுமென்ன வாழுது? முன்னிருந்த மதிப்பிலே கால்வாசிதானே இப்போ அதுக்கு!

**வெங்:** இப்ப நாங்க உங்களைப் பார்க்க வந்தது இந்த ஊர் தாசில்தாரைப் பற்றி உங்க காதிலே போடலாம்னுதான். சாலைப் புளிய மரத்தை இன்னும் காண்ட்ராக்ட் விடலே. அதுவரைக்கும் புளி எடுத்தா என்ன? 'குத்தகைக்குத்தான் இன்னும் விடலேயே; அரசாங்கச் சொத்து நம்ப சொத்துத்தானே' அப்படீன்னு கேக்கலே சார். நடவடிக்கை எடுப்பேன்னு மிரட்டுகிறார். அதெல்லாம் விவரமா இந்தக் கடிதாசிலே எழுதியிருக்கோம்.

**நல்ல:** கையெழுத்துப் போடாமல்தான்.

**வெங்:** உடனே நீங்க தகுந்த நடவடிக்கை எடுக்கணும்.

**நல்ல:** நீங்க உடனே நடவடிக்கை எடுத்தால் எங்களுக்கு இன்னொரு மொட்டை மனு எழுத வேண்டிய வேலை குறையும்.

**வெங்:** அதாவது உங்களைப் பற்றி...!

(லாரன்ஸ் அவ்விருவரும் தந்த கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு நிதானமாகக் கிழித்தெறிந்து விட்டுச் சிரிக்கிறார்.)

**நல்ல:** என்ன கிழிச்சிட்டார்?

**வெங்:** 'படிச்சுட்டார்...அதான்' கிழிச்சுட்டார்!

(மாதா கோயிலில் பணியாற்றும் சிறுவன் ஒருவன் வருகிறான். பாதிரியாரை நெருங்கிப் பேசுகிறான்.)

**பையன்:** யாரோ மேரி அக்காவைப் பார்க்கணுமாம். தேடிக்கிட்டு வந்திருக்காங்க!

**பாதிரி:** மேரியையா? யாரு பார்க்கணுமாம்? ஏன் வெளியே நிற்கணும்? உள்ளே வரலாமே? கூப்பிடு!

(ஓர் இளைஞன் தயங்கித் தயங்கி உள்ளே வருகிறான்.)

**பாதிரி:** யாரப்பா நீ?

**இளைஞன்:** நான் மேரியோட காலேஜ் மேட்.

**பாதிரி:** அப்படியா? ஏன் வெளியே நிற்கணும்? நீபாட்டுக்கு உள்ளே வந்து பேசறது தானே?

**வெங்:** இங்கே பேச மாட்டாங்க....அதுக்காக வேறே இடமிருக்கு.

**நல்ல:** இவங்க பேசறாங்களோ இல்லியோ! இவங்களைப் பத்தி நாங்க பேசறோம்!

**பாதிரி** (அவர்களை இடைமறித்து): மேரி! மேரி...!

(மேரி வருகிறாள். பாஸ்கரைக் கண்டு திடுக்கிட்டு நிற்கிறாள்.)

**பாதிரி:** நீங்க போறதுன்னு போகலாம்.

(மேரியும் இளைஞனும் போகிறார்கள்.)

**நல்ல:** ஃபாதர்! 'மேரி படிக்கிற ஊருக்குப் போயிருந்தோம், அவள் நடவடிக்கை சரியில்லே, நல்லா அலங்காரம் பண்ணிக்கிட்டு ஒரு பையன்கூட அடிக்கடி சுத்தறாள்'னு சொன்னோமே... ஞாபகமில்லையா?

**வெங்:** இப்ப ஞாபகப்படுத்தினா எப்படி? அதுக்குத்தான் அப்பவே ஒரு மொட்டை பெட்டிஷன் எழுதி அந்த அந்தோணிக்கே போடலாம்னு சொன்னேன். நீ கேக்கலே!

**லாரன்ஸ்:** இந்த விவகாரத்தைப் பார்க்கவா அந்த ஊருக்குப் போனீங்க?

**நல்ல:** சேச்சே! இதுபோல விவகாரம் இந்த ஊரிலே இல்லே என்பதாலா அந்த ஊருக்குப் போகணும்? இந்த ஊரிலேயே நிறைய நடக்குதுங்க. சிங்கப்பூர்லே யிருந்து வந்தாரே சிவசண்முகம். பெரிய பணக்காரர். அவர் பொண்ணு...டிரைவரோட....

(லாரன்ஸ் முறைக்க நல்லசிவம் மிரள்கிறார்.)

**நல்ல:** போட்ட பெட்டிஷனுக்குக் கைமேல் பலன். டிரைவருக்கு மூணு மாசம் புத்தூர்க் கட்டு!

**வெங்:** நாங்க அந்த ஊருக்குப் போனதே ஒரு வயிற்றெரிச்சல்! என்ன அநியாயம் பாருங்க! எனக்கு... எனக்கே... ஒரு மொட்டைப் பெட்டிஷன் வந்தது! ''உன் மாமனாரின் திருவிளையாடலைக் கண்டுகளிக்க நேரில் வரவும்'' என்று! அட, விளையாடறது மாமனாராச்சே....நேரவே கண்டு களிக்கலாமேன்னு போனேன். அங்கே கண்டது மேரியை. ..

**நல்ல:** இன்ஸ்பெக்டர் சார்! இதை நீங்க அந்தோணிகிட்டச் சொல்லிக் கண்டிக்கணும். இப்படி அவன் பொண்ணு திரியறது எங்க மாதிரி... யார் மாதிரி? எங்க மாதிரி பெரிய மனுஷாளுக்குத் தலை குனிவு. ஒரு கிராமத்துப் பொண்ணு... என்னதான் காலேஜிலே படிச்சாக்கூட இப்படியா...

(லாரன்ஸ் அவர்கள் வாயை அடக்குகிறார்.)

**பாதிரி:** ம்... அந்தப் பய அந்தோணி என்னடான்னா... உலகமே தன் பொண்ணு தான்னு உட்கார்ந்திருக்கான். இவளைப் பத்தி டாக்டர், வக்கில்னு பெரிய பெரிய கோட்டையெல்லாம் கட்டுகிறான். இந்தப் பொண்ணு என்னடான்னா விவரம் புரியாம இப்படிச் செய்யறாளே. காதல்.....காதலிக்கிறதிலே தவறில்லே... ஆனால் இவள் எப்படிக் காதலிக்கலாம்?

**லாரன்ஸ்:** ஆமாம், உங்ககிட்ட போயிட்டு வரேன்னு சொல்லிட்டு அந்தோணி எங்கே போனான் ஃபாதர்?

**பாதிரி:** மணியடிக்க சர்ச்சுக்குப் போயிருப்பான்.

(மேரி மாதாவின் முன் சுடர்விடும் மெழுகு வர்த்தியின் முன்னால் தள்ளாடியபடி போய் நிற்கிறார்.)

**பாதிரி:** லாரன்ஸ்... இன்று முழுவதும் என் மனத்தில் அலைபாய்ந்த வேதனை இப்போ எனக்கு ஓர் எச்சரிக்கையைச் சொல்லி விட்டது!

**லாரன்ஸ்** (திகைத்து): என்ன ஃபாதர் சொல்றீங்க?

**பாதிரி:** அதோ....அந்த மெழுகுவர்த்திக்கு என்னை விட முப்பது வயசு கூடவே ஆயிடுச்சு. மகனே! இந்தக் கோலத்தை எனக்குக் கொடுத்த மனிதர் என் கையிலே ஒப்படைத்தது அந்த ''ஞான ஒளி''... எப்போ எனக்குத் தவிர்க்க முடியாத கஷ்டம் வருகிறதோ அப்போ மட்டும்தான் அதை ஏற்றி வைத்துப் பிரார்த்தனை பண்ணணும்னு ஆணை! இன்றைக்கு இருந்த என் மனநிலையிலே அதை ஏற்றி வைக்கப் பிரார்த்தனை பண்ணினேன். அதற்குப் பதில் இப்போதான் எனக்குக் கிடைச்சுது.... லாரன்ஸ், உன்னுடைய இந்த வருகை வரவேற்க முடியாதது... உன்னாலே அந்த அந்தோணியோட வாழ்க்கையே அலைபாயப் போகுதுன்னு நினைக்கிறேன்.

(அதை ஆமோதிப்பதுபோல் மாதா கோயிலின் மணியோசை கேட்கிறது. சில நிமிட அமைதி.)

**லாரன்ஸ்:** என்ன ஃபாதர்! என்னவோ விபரீதமாச் சொல்றீங்க?

**பாதிரி:** ஓர் உள்ளுணர்வு பேசுகிறது!

**லாரன்ஸ்:** ம்... மணிச் சத்தம் ஓய்ந்து விட்டதே! இப்போ அந்தோணி எங்கே போயிருப்பான் ஃபாதர்?

**நல்ல:** நாங்க சொல்றோம்! நாங்க சொல்றோம்! ஆத்தங்கரை தென்னந் தோப்புக்குங்க.... பய அழிஞ்சு போறான்! சாயங்கால நேரமானா அங்கே போய் டேரா போட்டுடறான். விடிய விடியக் கள்ளு குடிக்கிறானுங்க.

**வெங்:** 'கள்ளு குடிக்கிறது கெடுதல், ரொம்ப தப்பு, மகாபாவம்! குடிக்கிறவங்களுக்கு ஆயுசு கம்மி, அவர்களை ஊரிலே யாரும் மதிக்க மாட்டாங்க! குடிக்கிறவன் பெண்டாட்டியின் நகைநட்டைக்கூட விற்று விடுவான், வேண்டாண்டா'ன்னு கேக்கலே...

**நல்ல:** 'கவலைப் படாதீங்க. எனக்குத்தான் பெண்டாட்டி கிடையாதே'ன்னு கிண்டல் பண்ணறான் சார். 'பெண்டாட்டி இல்லேன்னா என்னடா? பொண்ணிருக்காளே! அவள் நகையை விற்க நேரும்போது வேறே எங்கேயும் போய் ஏமாறாதேடா. எங்க கிட்டேயே வா'ன்னு அடிக்க வரான்! அவ

னுக்குப் புத்தி சொல்ல இங்கே யாருக்கும் தைரியம் வரலே. உங்களைப் பார்த்தால் அவன் அடிக்க வந்தால்கூடத் தாங்குவீங்க போலத் தெரியுது. நீங்களாவது அவனுக்குப் புத்தி சொல்லி அந்தத் தென்னந் தோப்பைக் காலி பண்ணச் சொல்லுங்க. உங்களுக்கு ரொம்பப் புண்ணியமாப் போகும்.

**வெங்:** இந்த வருஷம் தோப்பிலே நல்ல காய்ப்பு. இவரு குத்தகைக்கு எடுக்கலாம்னு இருக்கிறார்.

**லாரன்ஸ்:** என்ன ஃபாதர்? கள்ளு குடிக்கிறானு? நீங்க தடுக்க வேண்டிய விஷயமில்லையா ?

**பாதிரி:** தடுத்தால் அந்த முரடனுக்குக் குழந்தை மாதிரி பிடிவாதம்தான் அதிகமாகும் மகனே !

**லாரன்ஸ்:** நீங்கதான் என்றைக்குமே அவன் விஷயத்தில் 'ஃபாதரா' இல்லியே ? 'மத'ராக மாறிடறீங்களே !

**பாதிரி:** உண்மைதான் லாரன்ஸ் ! அவனுக்கு அம்மா அப்பா ஞாபகம் வந்தால் என் காலைக் கட்டிக்கிட்டுத்தான் ''ஓ''ன்னு அழுவான் !

அவனுக்கு இருக்கிற நல்ல குணத்துக்கு அவன் மட்டும் நல்ல கட்டுப்பாடு உள்ள மனுஷனு இருந்தா, அவனை அந்தோணின்னு கூப்பிடுவதைவிட மெழுகுவர்த்தின்னே கூப்பிடலாம். ஒளியைப் பரப்பிக்கிட்டே தேய்கிறான் அவன். ஆனால் ஒண்ணு. தன் விச்சையா வளர்ந்தானு ? கோவம் ! அதுதான் அவனைச் சில சமயங்களில் மிருகத்திலேயும் கேவலமான நிலைக்குக் கொண்டு போய் விடுகிறது.

லாரன்ஸ் ! அவனை நான் புகழ்ந்து பேசுகிறதாகவோ, இல்லே, உன் பொறுமையைச் சோதிக்க மூச்சு விடாமல் புலம்புகிறதாகவோ நினைக்காதே, அப்பனே !

அவன் இந்த ஊருக்கு உழைப்பவன். காலையிலே எழுந்தால் எந்த வீட்டுக்குள்ளே வேணுமானாலும் நுழைவான். தட்டிக் கேட்க ஆளே கிடையாது. ஒவ்வொரு வீட்டிலேயும் அவங்க கேட்காமலேயே தண்ணி நிரப்புவான். கடிதங்கள் ஏதாவது பட்டுவாடா செய்யணும்னு கவனிப்பான். குழந்தைகளைப் பள்ளிக்கு அழைத்துக் கொண்டு போவான். யார் என்ன வேலை சொன்னாலும் முகம் கோணாமல் செய்வான்.

தன் மகள் படிப்புக்காக வெயில் மழை என்று பாராமல் விறகு பிளக்கிறான்.

மாலை நேரங்களில் சிறுவர்களுடன் அவர்களுக்குச் சரியாக விளையாடுவான். மாதா கோயிலிலே மணியடிப்பான். வந்தவங்களையும் என்னையும் கவனிச்சுக்குவான். இன்னும் சொல்லப்போனால் இருக்கிறபோது நல்லது செய்கிறவனும் அவன்தான். இறந்த பிறகு கல்லறை வெட்டுபவனும் அவன்தான். காலமானவர்களுக்காக மனப்பூர்வமாக ஒரு நிமிஷம் பிரார்த்தனை செய்வான்.

(லாரன்ஸ் ஓசை எழுப்பாமல் மெல்லச் சிரிக்கிறார்.)

**பாதிரி:** அவன்கிட்டே ஒரு விநோதமான பழக்கம் உண்டு. தினம் காலையிலே கையிலே அரிசியையும் வெல்லச் சர்க்கரையையும் கலந்து எடுத்துக் கொண்டு வழியிலே உள்ள எறும்புப் புற்றுக்களிலே தூவிக்கிட்டே நடப்பான். 'ஏதுக்காகடா' என்று கேட்டால் அவன் என்ன சொல்லுவான் தெரியுமா ? 'பசுமாட்டுக்குப் புல் போட்டால் அது பாலை அதிகமாகக் கறக்கும் என்று பலனை எதிர்பார்த்துச் செய்கிற செயல். ஆனால் ஒரு பிடி அரிசியை இப்படித் தூவுகிறதிலே எவ்வளவோ லட்சம் உயிர்களுக்குச் சாப்பாடு போட்ட பெருமை இருக்கு' என்பான்!

லாரன்ஸ்! பலனையோ, மற்றவர்கள் பொருளையோ எதிர்பார்க்காமல் இவ்வளவு வேலை செய்கிறானே... தனக்கென்று இதுவரையில் எதுவுமே அவன் கேட்டதில்லே அப்பா! ஆண்டவனைப் பார்த்து அவனுக்குக் கொடுத்த ஒரு பெண்ணைத் தவிர அவனுக்கு வேறு எதுவும் கிடையாது.

**லாரன்ஸ்:** நீங்க எவ்வளவுதான் சொன்னாலும் அவன் குடிக்கிறான் என்றால் அந்த ஒரு கெட்ட பழக்கத்திலே எல்லாமே அடிபட்டுப் போகுமே ஃபாதர்!

**பாதிரி:** அது சின்ன விஷயம் மகனே!

**லாரன்ஸ்:** சின்ன விஷயம் என்று சட்டம் எதையுமே அலட்சியப்படுத்தி ஒதுக்கித் தள்ளாது. ஆல்ரைட். அவனை நான் இப்போதே பார்க்கணும். எங்கே இருப்பான்?

**பாதிரி** (பதற்றத்துடன்): லாரன்ஸ்!

**லாரன்ஸ்:** பயப்படாதீர்கள் ஃபாதர் ! இப்போ நான் லாரன்ஸ்தான். அவனைப் பார்க்கப் பிரியப்படுகிறேன். இந்தத் தடவை நான் நடவடிக்கை ஏதும் எடுக்க மாட்டேன். ஒரு நண்பன் என்ற முறையிலே புத்தி சொல்கிறேன். ஆனால் ஒரு விஷயம் ஃபாதர். உங்களுக்கு அவன் எப்படியோ அப்படித்தான் நானும். அவனுடைய சேவைகளைப் புகழ்ந்த உங்கள் மனம் என் கடமை உணர்வையும் பாராட்டணும். ஒருவேளை அவன்... என்னையும் மீறி.... நான் என்ன சொல்லியும் கேட்காமல் போனானேயானால்.....மன்னிச்சுடுங்க ஃபாதர், நான் இன்ஸ்பெக்டர் லாரன்ஸாக மாறவேண்டி வரும். அவனை இப்போது நான் எங்கே காணலாம்?

**நல்ல:** வாங்க! நாங்க இடத்தைக் காண்பிக்கிறோம்.

**வெங்:** எங்களுக்கும் இப்போதைக்கு வேறு பொதுஜன சேவையில்லே....

(பாதிரியார் தலை கவிழ்கிறது. அவர் உள்ளே போக, லாரன்ஸ் உறுதியாக இருவருடனும் வெளியே செல்கிறார். அமலோற்பவ மேரி மாதாவின் அருகே அருள் விளக்கின் சுடர் காற்றில் படபடக்கிறது.) **(தொடரும்)**

# ரோட்டரி சூளைகளுக்கு தேவையான சிறந்த தேய்மான-எதிர்ப்புக்கு ஏஸிஸி யின் தரமான ஹை ஆல்யுமினு ஃபயர்ப்ரிக்குகளை நம்புங்கள்



**ஏஸிஸி ஃபயர்ப்ரிக்குகளின்**

**விசேஷ அம்சங்கள்:**

• ஹை ரிஃப்ரேக்டரினெஸ் • சூளையைத் துவக்கும்போதும், அணைக்கும்போதும் உண்டாகும் மிகவும் அதிகமான மற்றும் துரிதமான வெப்ப மாறுதல்களினுல், நொறுங்கிவிடாமல் திடமாக இருக்கும் திறன் • இயக்கத்தின் வெப்பநிலையில் 'க்ளின்கர்' உருகுவதனுல் (ஃப்ளக்ஸிங் ஆக்ஷன்), இவை பாதிக்கப்படுவதில்லை.

நிபுணர்களின் ஆலோசனையும், விற்பனைக் குழுவின் டெக்னிகல் சர்வீஸும் விண்ணப்பத்தின் பேரில் இலவசமாக வழங்கப்படுகிறது.

**ஏஸிஸி ஃபயர்ப்ரிக்குகள் ஐ.எஸ். தர நிர்ணயங்களுக்கு ஏற்ப தயாரிக்கப்படுகின்றன.**

உங்கள் தேவைகளுக்கு அருகிலுள்ள **தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கோ. ஆஃப் இந்தியா லிமிடெட்**, அவர்களின் கிளையையோ, அவர்களுடைய விநியோகஸ்தர்களையோ அணுகுங்கள்.

**தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிட்.**

தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

# முக்கால்கோடியில் ஒரு மாளிகை

சென்னை மௌண்ட்ரோட்டில் புதிதாக உருவாகி வருகிறது ஆறு அடுக்கு மாளிகை ஒன்று. இதன் உரிமையாளர்களுள் ஒருவர் திரு டி. என். கே. ராஜகோபால செட்டியார். 1935 முதல் திரைப்படத் துறையில் ஈடுபட்டு வருகிறவர். இந்த ஆறு அடுக்கு மாளிகை பற்றிக் கேட்டபோது அவர் சொன்னார்:

''நாற்பது லட்சம் ரூபாய் செலவு செய்து ஐந்து வருஷங்கள் பாடுபட்டுக் 'கொஞ்சும் சலங்கை' படம் எடுத்தோம். சென்னை மௌண்ட் ரோட்டில் இருக்கும் ஓர் உயர்தரமான தியேட்டரில் அதைத் திரையிட விரும்பினோம். ஆனால் அந்தத் தியேட்டர் எங்களுக்குக் கிடைக்காமல் போய் விட்டது. அந்த ஏமாற்றத்தை வார்த்தைகளால் விளக்க முடியாது! நமக்கென்று ஒரு தியேட்டர் சொந்தமாக இருந்தால், இப்படி ஓர் ஏமாற்றமும் மன வருத்தமும் ஏற்பட்டிருக்குமா என நினைத்தோம். 'கொஞ்சும் சலங்கை'யை வெளியிடும் போது ஏற்பட்ட ஏமாற்றத்தின் காரணமாக, 'இதே மௌண்ட் ரோட்டில் ஒரு தியேட்டர் கட்டிவிட வேண்டும்' என்று முடிவு செய்தோம். அதன் விளைவாக உருவாகி வருவதுதான் இந்தப் புதிய பிரும்மாண்டமான பட மாளிகை!''

உண்மையிலேயே பிரும்மாண்டமான கட்டடந்தான்! அடித்தளத்தில் 6000 சதுர அடி பரப்புள்ள இடத்தில் ஒரு பெரிய ஹோட்டல். அதன்மேல் 1200 பேர்கள் உட்கார்ந்து படம் பார்க்க 'தேவி சினிரமா' என்ற தியேட்டர். 70 எம்.எம். படங்கள் தவிர 'சினிரமா' படங்களும் திரையிடுவதற்கேற்ற முறையில் இது அமைக்கப்படுகிறது. சென்னையில் உருவாகும் முதல் சினிரமா தியேட்டர் இதுவே. இதே மாளிகையின் இன்னொரு மாடியில் 'தேவி சினி பாரடைஸ்' என்று இன்னொரு 70 எம்.எம். தியேட்டர். மொட்டை மாடியில் 'ரூஃப் கார்டன்' சிற்றுண்டி விடுதி. ஆறு மாடிகள் படியேற வேண்டியதில்லை. மாளிகையின் முன்பகுதியில் ஒன்றும் பின்பகுதியில் ஒன்றுமாக இரு 'எலிவேட்டர்'கள் உண்டு. காலாற நடந்து ஏற வேண்டும் என்று விரும்புகிறவர்களுக்கு ஆஸ்பத்திரிகளில் அமைந்துள்ளது போன்ற சரிவான பாதைகள் இரண்டு அமைக்கிறார்கள். இவ்வளவு இருந்து ஏர்கண்டிஷன் இல்லாமல் போகுமா என்ன? உயர்ந்த கட்டணம் செலுத்துவோருக்கும் சரி, குறைவான கட்டணம் செலுத்திக் கீழ் வகுப்பு டிக்கட் வாங்குவோருக்கும் சரி — ஒரே மாதிரி வசதியான ஆசனங்கள்.



இந்தியாவிலேயே முதல் முறையாகப் பயன்படுத்தப்படும் கான்கிரீட் உத்தரங்கள்

''இப்பட மாளிகையைக் கட்டுவதற்கான மொத்தச் செலவு என்ன ஆகும் தெரியுமா? எழுபத்தைந்து லட்சம் ரூபாய்!-முக்கால் கோடி!''

நான் பிரமித்துப் போனதைக் கண்டு திரு ராஜகோபால செட்டியார் கூறினார்: ''செலவைப் பார்த்தால் முடியுமா? தமிழ், இந்தி மொழிகளில் 70 எம். எம். படங்கள் தயாராகும் காலம் வெகு தூரத்தில் இல்லை. படங்கள் தயாரான பிறகு தியேட்டர் கட்ட முடியுமா? 'சினிரமா' தியேட்டர் சென்னையில் இல்லை என்ற குறைக்கும் இனி இடம் இராது. நல்ல திரைப்படமாக இருந்தால் இந்த ஒரே கட்டடத்தில் உள்ள இரு தியேட்டர்களிலும் படத்தை வெளியிடலாம்.''

''மற்ற இரு மாடிகளிலும் உள்ள இடத்தை எவ்வாறு பயன்படுத்தப் போகிறீர்கள்?''

''கடைகள், வர்த்தக நிறுவனங்கள் — இவற்றுக்கு வாடகைக்கு விட்டுவிடப் போகிறோம்.



இரண்டு தேவி தியேட்டர்களும் இதனுள் அடக்கம்

படம் பார்த்து விட்டு, அன்றாட உபயோகத்துக்குத் தேவையான பொருட்களை இதே கட்டடத்திலேயே வாங்கி விடலாம்!''

பிரபல தொழில் — வர்த்தக நிறுவனங்களான டி.என்.கே. குரூப் உரிமையாளர்களுள் திரு ராஜகோபால செட்டியார் மூன்றுமவர். மூத்தவர் திரு நஞ்சப்ப செட்டியார். இவர்களுக்குச் சொந்தமான — 'அகஸ்தியா' டாக்கிஸிலிருந்து கிடைக்கும் லாபம் முழுதும் 'அகஸ்தியா டிரஸ்டி'ன் தரும காரியங்களுக்குப் பயன்படுகிறது. தியாகராய நகரில் உள்ள அகஸ்தியர் ஆலயம் இந்த 'டிரஸ்டி'ன் நிருவாகத்திலுள்ளது. சேலத்தில் ஒரு மருத்துவக் கல்லூரி நிறுவவும் டி. என். கே. நிறுவனம் பெருமுயற்சி எடுத்து வருகின்றது.

இந்தியாவிலேயே முதன் முதலாக 'ப்ரீ—ஸ்ட்ரெஸ்ட் காங்கிரீட்' உத்தரங்கள் அமைத்து உருவாகிறது இம்மாளிகை. சென்னை மவுண்ட் ரோட் காஸ்மாபாலிடன் கிளப்புக்கு அருகில் எழும்பும் இக்கட்டிடத்தில் இடம் பெறும் இரு தியேட்டர்களின் திறப்பு விழாவை இவ்வாண்டு தீபாவளி சமயத்தில் வைத்துக் கொள்ள உரிமையாளர்கள் எண்ணியிருக்கிறார்கள். —பாணன்

# படித்துப் பாருங்கள்

## ஹிந்திச் சிறுகதைகள்

**பா**ரத நாட்டுக்குக் கதை புதிதல்ல; ஆனால் நவீன யுகச் சிறுகதை உத்திதான் புதியது; மேல்நாட்டிலிருந்து இறக்குமதியானது.

ஏனைய மொழிகளைப் போலவே, ஹிந்தி மொழியும் பல நவீனச் சிறுகதையாளர்களைப் பெற்றுள்ளது. சிறுகதைகளுக்கு வடிவம் கொடுத்து, ஹிந்தி மொழி வரைவழி காட்டிய பெருமை ஸ்ரீ பிரேம்சந்தைச் சாரும். அவர் எழுதிய பல கதைகளும் பாரதத்தின் பல மொழியினராலும் போற்றப்பட்டன்வ. அவரது பிற்கால எழுத்தான 'சவக் கோடி' என்னும் கதை இத்தொகுதியில் முதல் இடம் பெற்றுள்ளது.

சம்பவப் பின்னலால் சிறக்கும் கதைகள், உள்ளத்து உணர்வுகளைப் பிழிந்தெடுத்து உயர்வு காணும் கதைகள், வரலாற்றுச் சிறப்புக் கொண்ட கதைகள் என்று—இப்படியாக இருபத்துமூன்று கதைகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

காலத்தால் அழியாத எண்ணச் சிறப்புக்கள் கொண்ட கதைகள் உள்ளத்துக்கு மகிழ்ச்சி தரும் வேளையிலே, சூழ்நிலையால் சுற்றிப் பின்னப்பட்ட கதைகள் மனிதன் அறிவுப் பசியைத் தீர்க்க உதவுகின்றன.

ஸ்ரீ சந்திரதர் சர்மா குலேரி என்பவர் எண்ணி மூன்றே மூன்று கதைகள் எழுதியவர். ஆனால் ஒரே ஒரு கதையால் சிறுகதை உலகில் அழியாத இடம் பெற்றவர். சூழலையும், இனச் சம்பிரதாயங்களையும் உணர்ந்து படித்தாலே, அவரது 'அவன் சொன்னான்' என்னும் சிறப்புக் கதையின் கருத்தழகை உணர முடியும்.

ஸ்ரீ ஜய சங்கர் பிரசாதின் 'சோதா' என்னும் கதை — வெறும் 'சோதா'க் கதையில்லை; வீரக் கதை. கதையைக் கொண்டு போயிருக்கும் உத்தியும் முறையும் சிறந்தது.

ஸ்ரீ உபேந்திர நாத் 'அஷ்கி'ன், 'பாகரின் ஆசை' ஒட்டகத்தைச் சுற்றியதென்றாலும், வாசிப்பவர்களையும் ஒட்டகத்தோடு சுற்ற வைத்து உள்ளத்தில் இடம் பெறும் கதை.

இத்தொகுதியில் உள்ள பல கதைகளும் ரசமான கதைகள். ஆயினும், பல கதைகள் பலரால் மொழிபெயர்க்கப்பட்டு முன்பே தமிழ் வடிவம் பெற்று விட்டவை; பலரும் படித்து ரசித்தவை. இப்பொழுது ஒரு கை மொழிபெயர்ப்பாக வெளிவந்துள்ளன. இச் சிறப்புப் பணியை ஸ்ரீமதி சரஸ்வதி ராம்நாத் செய்துள்ளார்.

இடைக்குமிடம்: சாகித்திய அகாதெமி, இளை அலுவலகம், சென்னை—34; விலை: ரூ. 7-50.

## டாக்டர் ரங்காச்சாரி

**டா**க்டர் ரங்காச்சாரியை மருத்துவத் துறையில் ஒரு மேதை என்று சொல்கிறோம்; பாராட்டுகிறோம். அதற்கும் மேலாக அவர் ஒரு மனிதாபிமானி, ஏழை பங்காளர் என்பதால் போற்றுகிறோம். இந்த இரண்டுக்கும் மேலாக அவரிடம் இன்னொரு சிறந்த செல்வம் இருந்தது. அது சமயோசிதம்.

எப்பேர்ப்பட்ட மேதையையும் திகைக்க வைக்கக் கூடிய சில தருணங்கள் வாழ்வில் ஏற்படுவதுண்டு. அத்தகைய இக்கட்டான நிலைகள் ரங்காச்சாரியின் வாழ்விலும் ஏற்பட்டன. ஆனால் அவர் செயலற்றுப் போய் நிற்காமலிருக்க உதவியது சமயோசிதம்.

தோளின் குறுக்கே மூங்கில் குச்சியுடன் நடனமாடிச் சென்றான் சிறுவன். மாடு மிரண்டு பாய்ந்தது. சிறுவன் பதறி ஓடினான். மூங்கிலின் கூரிய முனை அப்போது அருகிலிருந்த நிறை மாதக் கர்ப்பிணியின் வயிற்றில் குத்தி விட்டது. உள்ளே இருந்த சிசு அதிர்ச்சிக்குள்ளாகிக் கரத்தை நீட்ட அது அந்த ஓட்டை வழியே வெளியே துருத்திக் கொண்டு வந்து விட்டது!....

டாக்டர் ரங்காச்சாரி தமது உதவியாளர் சிகரெட் புகைப்பதைப் பார்த்தார். உடனே ஒரு யோசனை. சிகரெட்டை வாங்கி வெளியே துருத்திக் கொண்டிருந்த கரத்தின் நுனியில் பட்டதும் படாததுமாக வைத்தார். சூடு பொறுக்காமல் சிசு கையை உள்ளே இழுத்துக் கொண்டது! அவசரமாக டாக்டர் கருப்பைச் சுவரையும் கிழிந்த அடிவயிற்றுப் பாகத்தையும் மூடித் தைத்து விட்டார்!

இப்படி டாக்டர் ரங்காச்சாரியின் வாழ்வில் நடந்த எத்தனையோ அதிசயமான உண்மைச் சம்பவங்களை இந்த நூலில் காணலாம். ஒரு நாவலைப் படிப்பது போன்ற விருவிருப்பு இருக்கிறது.

நூலாசிரியர்: ராஜம் கிருஷ்ணன்; இடைக்குமிடம்: சுதேசமித்திரன், சென்னை 2; விலை: ரூ. 6-00.

# ராமாயணம்

## 3. விசுவாமித்திரர்

ராஜாஜி

வேள்வியில் அடைந்த பாயசத்தை அருந்தியதன் பயனாக மூன்று பத்தினிகளும் கர்ப்பம் தரித்தார்கள். காலக்கிரமத்தில் கௌசல்யா தேவி ராமனைப் பெற்றாள். அடுத்தபடி கைகேயி பரதனைப் பெற்றாள். சுமத்திரா தேவி இரு குமாரர்களைப் பெற்றாள். அவர்களே இரட்டையர்களான இலட்சுமணனும் சத்ருக்னனும். பாயசத்தில் அருந்திய பங்கின் விகிதாசாரப்படி இந்த நான்கு குமாரர்களுக்கும் விஷ்ணு அம்சம் சொல்லப்படுகிறது. முறையே ராமன் விஷ்ணுவில் பாதி என்றும், லக்ஷ்மணன் விஷ்ணுவில் கால் பங்கு என்றும், பரதனும் சத்ருக்னனும் ஒவ்வொருவர் அரைக்கால் பங்காகவும் சொல்லப்படுகிறது. சுமத்திரை முதலில் அருந்தியது கால் பாகம். கடைசியாக அருந்தியது கைகேயிக்குத் தந்தது போக மிஞ்சி நின்ற அரைக்கால் பாகம். முந்தி அருந்திய கால் பங்கு பாயசம் லக்ஷ்மண சொரூபமாயிற்று. பிந்தி அரைக்கால் பங்கு சத்ருக்ன சொரூபமாயிற்று. இந்த விஷயங்கள் அவ்வளவு முக்கியமல்ல. கடவுளைப் பங்கு பண்ணிக் கணக்கிட முடியாது. பரம்பொருளில் ஒரு சிறு பங்கும் பூரணமாகவே நிற்கும் என்பது சுருதி.

> ஓம் பூரண மதஹ் பூர்ணமிதம்
> பூர்ணாத் பூர்ண முதச்யதே
> பூர்ணஸ்ய பூர்ணமாதாய
> பூர்ணமேவா வசிஷ்யதே

"அங்கிருப்பது பூர்ணம், இங்கிருப்பதும் பூரணம். பூரணத்திலிருந்து பூரணம் உண்டாகியுள்ளது. பூரணத்தினின்று பூரணத்தை எடுத்த பிறகும் மிஞ்சி நிற்பது பூரணமே."

பரம்பொருள் பௌதிக கணித நூல் நியதிக்கு அடங்காது.

நான்கு பேர்களுக்கும் அரச குமாரர்களுக்கும் விதிக்கப்பட்ட எல்லாப் பயிற்சிகளும் தரப்பட்டன. குழந்தைப் பருவத்திலிருந்து லக்ஷ்மணனுக்கும் ராமனுக்கும் விசேஷப் பிரியம் வளர்ந்து வந்தது. அப்படியேதான் பரதனுக்கும் சத்ருக்னனுக்கும் பரஸ்பரம் அதிக அன்பு. எப்போதும் கூடவே இருப்பார்கள். இதுவும் தாய்மார்கள் பாயசம் அருந்திய முறையிலிருந்தே உண்டாகிய நெருங்கிய பற்று என்று வைத்துக் கொள்ளவும்.

நான்கு குமாரர்களைப் பெற்று, அவர்களுடைய குணங்களும், சாமர்த்தியமும், பிரீதியும் தேஜஸும் வளர்ந்து சிறப்புற்று வர, தசரத மகாராஜன் தேவர்களால் சூழ்ந்த நான்முகக் கடவுளைப் போல் சந்தோஷமாக இருந்து வந்தான்.

ஒருநாள் தசரதன் தன்னுடைய மந்திரிகளுடன் உட்கார்ந்து குமாரர்களுக்கு விவாகம் செய்வதைப் பற்றி

யோசனை செய்து கொண்டிருந்தான். அப்போது காவல் அதிகாரிகள் பரபரப்புடன் உள்ளே வந்து, ''விசுவாமித்திர மகா முனிவர் அரசனைக் காணக் காத்திருக்கிறார்'' என்றார்கள்.

விசுவாமித்திரர் என்றால் எல்லாருக்கும் பயம். மகா சக்தியும் புகழும் பெற்ற முனிவர். எதிர்பாராதபடி தம்மைக் காண வந்திருக்கிறார் என்று தெரிந்ததும் தசரதன் தன் ஆசனத்தை விட்டு எழுந்து, முனிவரை எதிர்கொண்டு வரவேற்று முறைப்படி ஆசனத்தில் அமரச் செய்தான்.

விசுவாமித்திர முனிவர் ஓர் அரசனாக இருந்து, பிறகு தவம் செய்து முனிவரானவர். தவத்திலும் வெகு பாடுபட்டு வெற்றி பெற்றவர். சாபத்தால் வருந்திய திரிசங்குவின் பேரில் கருணை கொண்டு முன்னொரு காலத்தில் புதியதொரு பிரம்மாவையே உண்டாக்கி ஒரு புதுப் பிரபஞ்சத்தையும் சிருஷ்டி செய்து விடுவேன் என்று தொடங்கித் தம் தபோபலத்தால் நட்சத்திரங்களை உண்டாக்கி, ஆகாயத்தின் தென் பாகத்தில் நிலைக்கச் செய்தவர். தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிப் புது சிருஷ்டியை அந்த அளவில் நிறுத்திக் கொண்டார். இவை இராமாயண நிகழ்ச்சிக்கு முன்பு.

விசுவாமித்திரர் முனிவராவதற்குமுன் கௌசிக ராஜாவாக இருந்த காலத்தில் தன் சைன்யத்துடன் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டு போகும் சமயம் ஒரு நாள் வசிஷ்ட மகரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்றார். வசிஷ்ட மகா முனிவரை நமஸ்கரித்து அவரிடம் தாமும் மரியாதை பெற்றுக் கொண்டார்.

க்ஷேம சமாசாரம் விசாரித்த பிறகு ''உமக்கும் உம்முடைய ஆட்களுக்கும் நான் அதிதி உபசாரம் செய்து போஜனம் செய்வித்துக் கௌரவம் அடைய வேண்



டும். இந்த ஆசையை நிறைவேற்று வீராக'' என்று வசிஷ்டர் சொன்னார்.

விசுவாமித்திரர், ''சுவாமி, தாங்கள் எனக்கு ஜலம் தந்து செய்த உபசாரமே பெரிய விருந்தாக வைத்துக் கொள்ளு கிறேன். தங்களைத் தரிசித்ததே என் பாக்யம். 'உனக்கு அதிதி பூஜை செய்ய விரும்புகிறேன்' என்று தாங்கள் சொன்ன அன்பான வார்த்தைகளே எனக்கும் என் சேனைக்கும் செய்த பெரு விருந்தாகும். எனக்குப் போக விடை கொடுத்தருள வேண்டும்'' என்றார்.

ரிஷியாசிரமத்தில் பெரும் சேனை யோடு வந்த ஓர் அரசனுக்கு எவ்வாறு விருந்து செய்விக்க முடியும்? ஆகை யால் வசிஷ்டர் சொன்னதைச் சாதா ரண உபசார வார்த்தையாக வைத்துக் கொண்டு விசுவாமித்திரர் மேற்கண்ட வாறு சொன்னார்.

ஆனால் வசிஷ்டர் போஜனம் செய்தே போகவேண்டும் என்று நிர்ப்பந்தித்தார்.

விசுவாமித்திரர், ''கோபித்துக் கொள் ளக் கூடாது. தங்களுடைய போஜன உபசாரத்தை நான் இகழ்ந்ததாக வைத் துக் கொள்ள வேண்டாம். எனக்கும் என்னுடைய பெரும் பரிவாரத்துக்கும் இவ்விடம் ஆசிரமத்தில் எப்படி போஜன பதார்த்தங்கள் திடீர் என்று கிடைக்கும்? இதற்காகத்தான் கவலைப் படுகிறேன்'' என்று வியக்தமாகச் சொன்னார்.

வசிஷ்ட முனிவர் புன்னகை செய்து, தம் பசுவை அழைத்து, ''குழந்தாய், சபலையே! அரசனுக்கும் பரிவாரத்துக் கும் வேண்டிய போஜனம் உடனே தந்து உபசரிப்பாய்'' என்றார்.

அப்போது கௌசிக ராஜன் திகைத் துப் போகும்படியான ஓர் அற்புத நிகழ்ச்சி நடந்தது. அரசனுடைய பரி வாரத்துக்கும் பெரும் சேனைக்கும் வேண் டிய அளவில் அநேக விதமான ருசி யான பதார்த்தங்கள் தாமாகத் தோன் றிக் குவிந்து விழுந்தன. அன்ன பான வகைகள், பணியாரங்கள், நெய், தயிர், புஷ்பம், வாசனைத் திரவியங்கள் ஒன்றும் விடாமல் எல்லாம் மனத்தில் நினைத்த மாத்திரத்தில் ஆசிரமத்தில் எல்லோருக் கும் பரிமாறப்பட்டன. கௌசிகருடைய பத்தினிமார்கள், மந்திரிகள், பந்து பரி வாரங்கள், புரோகிதர்கள், சேனை யாட்கள், வேலையாட்கள் அனைவரும் ரிஷியாசிரமத்தில் திருப்தியாக விருந்து உண்டு, ரிஷியின் தபோ பலத்தைக் கண்டு வியப்பில் மூழ்கினார்கள்.

விசுவாமித்திரர் தம்முடைய நன்றி யைத் தெரிவித்துவிட்டு முடிவில் வசிஷ் டரைக் கேட்டுக் கொண்டார்.

''இந்தச் சபலையை எனக்குத் தர வேண்டும். இதன் சக்தியை நான் கண் டேன். இத்தகைய பொருள் ராஜ தருமத் தின்படி அரசனுக்கே உரியது'' என்றார்.

இதைக் கேட்ட வசிஷ்டர் மிகவும் வருத்தப்பட்டார். சபலையை விட்டுத் தாம் பிரிய முடியாது. அதற்குப் பல காரணங்கள் உண்டு என்று சொல்லிப் பசுவைக் கொடுக்க மறுத்தார்.

மறுக்க மறுக்க அரசனுக்கு ஆசை அதிகரித்தது. பசுவுக்குப் பதிலாக உமக்கு இதைத் தருவேன், அதைத் தருவேன் என்று கௌசிகர் வசிஷ்ட ருடைய மனத்தை மாற்றப் பார்த் தார். முடியவில்லை. வசிஷ்டர் ஒரே உறுதியாக, ''இந்தப் பசுவுக்கு விலை யாக நீர் கொடுக்கக் கூடிய செல்வம் அனைத்தும் எனக்குக் கொடுத்தாலும் பயனில்லை. சபலையைக் கொடுக்க முடி யாது'' என்று சொல்லி விட்டார்.

அதன் பேரில் விசுவாமித்திரர் கடுங் கோபங் கொண்டு, தம் சேனையாட்க ளுக்கு உத்தரவிட்டுச் சபலையைப் பலவந் தமாக இழுத்துப் போகப் பார்த்தார்.

சபலை கண்ணீர் விட்டு அழுது கொண்டு, ''நான் ரிஷிக்கு என்ன அபராதம் செய்தேன்? ஏன் என்னைக் கைவிட்டார்? இவர்கள் என்னை இழுத் துக் கொண்டு போகப் பார்க்கிறார் களே! என் எஜமானராகிய முனிவர் சும்மா பார்த்துக் கொண்டிருக்கிறாரே!'' என்று சுற்றி நின்ற சேனையாட்களை முட்டித் துரத்திவிட்டு வசிஷ்டரிடமே சரணமடைந்தது.

கூடப் பிறந்த தங்கையைப்போல் பிரியமான தம் அருமைப் பசு சோகத் தால் கதறுவதைப் பார்த்து வசிஷ்டர், ''குழந்தாய்! உன்னை இம்சிக்கும் இவர்க ளைத் தாக்கும்படியான சேனையை நீ உண் டாக்குவாயாக!'' என்று சொன்னார்.

உடனே அப்பசு ''ஹும், ஹும்'' என்று கர்ஜித்து எண்ணிறந்த வீரர் களை உண்டாக்கி விசுவாமித்திரருடைய ஆட்களைச் சிதறடித்தது.

இதைக் கண்ட விசுவாமித்திரர் கண்கள் சிவந்து, அடங்காக் கோபம் கொண்டு, ரதம் ஏறிப் பாணங்களைப் பிரயோகித்தார். சபலையும் புதிய புதிய படைவீரர்களைத் தன் உடலி லிருந்து வெளிப்படச் செய்து விசுவா மித்திரரை முறியடித்து அவர் பெரும் சேனையையும் நாசம் செய்தது. போர் முற்றிப் போயிற்று. விசுவாமித்திர ருடைய குமாரர்களில் சிலர் வசிஷ் டரைக் கொல்ல வந்தார்கள். வசிஷ் டர் அவர்களைப் பார்த்து வாயால் அதட்டியதும் சாம்பலானார்கள்.

அவமானமடைந்த விசுவாமித்திரர் முகக் காந்தியை இழந்து அந்த இடத்தி லேயே தம் ராஜ்யத்தை ஒரு மகனிடம் ஒப்படைத்து விட்டு வசிஷ்டரை எப்படி யாவது அடக்க வேண்டும் என்று உமா பதியை நோக்கித் தவம் செய்ய இமய மலைக்குப் போய் விட்டார். **(தொடரும்)**




கடுமை வாய்ந்த, மலிவான தேய்ப்புச் சாதனங்களை நம்பியிருக்க முடியுமா? கண்டிப்புடன் பெற்றிடுவீர் நுரைவளமோங்கும் விம். பேசின், தொட்டி, பீங்கான் பாண்டங்கள், பாத்திரங்கள், எதுவாயினும் சரி—விம் பட்ட இடமெல்லாம் ஒளிப் பிழம்பே. துப்புரவாக்குவதில் அதிக ஆற்றல் வாய்ந்த விம், விடாப்பிடியான பிசுக்குக்கும் விடைகொடுக்கும். துப்புரவான இல்லங்களுக்கு அடையாளம் ஒப்பிலாத விம் ஒளி.

ஓங்கிய ஒளிபெறவே—வாங்குவீர் விம்.

**பாங்கான இல்லங்களிலே—விம், பளிச்சிடும் இல்லங்களிலே விம்**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-V.19-140 TM

ஒரு நாள் பேராசிரியர் தம் உதவியாளர்கள் மூவரையும் அவசரமாக அழைத்தார், ஒரு ரகசியத் திட்டம் பற்றிப் பேச.

## அம்புலிக்கு அப்பால்.. கதை: புஷ்பா 2 படம்: விஜயா.
















சும்மா தமாஷுக்குச் சொன்னேன் கோபி.. பச்சைக் கிரகத்துக்கு நீ போனால் நானே சென்றமாதிரி சந்தோஷப் படுவேன். பிரயாகர் பொறாமைப் படக் கூடாதே என்று அவனைத் தேர்ந்தெடுத்து விட்டாய். ஆனால் நீ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்! பிரயாகர் எதற்கும் துணிந்தவன்! அவனை நம்பாதே!


பச்சைக் கிரகப் பயணத்துக்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருக்கின்றன. இரவு-பகல் பாராமல் கோபி ஆராய்ச்சியில் மூழ்கியிருக்கும் போது ஒரு நாள் அறிமுகமில்லாத ஒருவன் கோபியைக் காண வந்தான்.
எக்ஸ்க்யூஸ் மீ மிஸ்டர் கோபி நீங்கள் 'பிஸி'யாக இருக்கும் போது வந்து தொல்லை கொடுக்கிறேன்.
பரவாயில்லை.. சொல்லுங்கள், என்ன வேண்டும்?


நேரே விஷயத்துக்கு வந்து விடுகிறேன். நீங்கள் பச்சைக் கிரகத்துக்குப் போவதற்கான ஏற்பாடுகளில் முனைந்திருக்கிறீர்கள் அல்லவா?
அட! உங்களுக்கு எப்படி அது தெரியும்? அது பரம ரகசியமாயிற்றே!


எந்த ரகசியமும் எங்களுக்கு வந்து சேரும் கோபி! நீங்கள் இந்தப் பயணத்தை மேற்கொள்ளக் கூடாது என்று கேட்டுக் கொள்ளவே நான் வந்திருக்கிறேன்!
என்னது!


மீண்டும் சொல்கிறேன், நீங்கள் பச்சைக் கிரகத்துக்குப் போகக் கூடாது! இது எங்கள் வேண்டுகோள் மட்டுமல்ல, கட்டளையும் கூட!

தொடரும்....






அண்ணாதுரை ஓர் அற்புதம். இருபதாம் நூற்றாண்டைய நம்ப முடியாத அதிசயம் !

அண்ணாதுரை காலமான போது பரம ஏழையும் பெரும் பணக்காரனும் ஒருசேர நின்று கண் கலங்கக் கண்டோம்.

தமிழில் எழுத்து வாசனை அற்றவனும், தமிழில் பெரும் பண்டிதனும் ஒரேமாதிரி துயருற்று நிற்கப் பார்த்தோம்.

வைதிகப் பிராமணர்களும், வைதீகம் என்றால் வீசை எவ்வளவு என்று கேட்கக் கூடியவர்களும் துக்கத்தைப் பகிர்ந்து கொண்டார்கள்.

அரசியலில் அண்ணாதுரைக்கு ஆதரவாக இருந்தவர்களும், எதிர்த்தவர்களும் ஒரே மாதிரி துக்கம் அனுபவித்தார்கள்.

இப்படிப் பலதரப்பட்ட மக்களை ஒன்று போல் துக்கமடையச் செய்த அண்ணாதுரை, இவர்களையெல்லாம் கவர ஏதாகிலும் குறுக்கு வழி கடைப்பிடித்தாரா என்றால் அதுதான் இல்லை.

எல்லாருக்கும் தெரிந்த மிகமிகப் பகிரங்கமான **உண்மை வழி**யைக் கடைப்பிடித்தார். ''எல்லா விளக்கும் விளக்கல்ல; சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு'' என்று தம் மனமறிந்த உண்மையைப் பகிரங்கமாக ஒப்புக் கொள்ளும் வழியைப் பின்பற்றினார். இது காரணமாகப் பிறர் நிந்தித்தாலும் எள்ளி நகையாடினாலும் அவர் பொருட்படுத்தவில்லை.

1947 சுதந்திர தினத்தைத் துக்கநாளாகக் கருத வேண்டும் என்ற தமது தலைவர் ஈ. வெ. ரா.வின் விருப்பத்துக்கு மாறாக மகிழ்ச்சியுடன் கொண்டாட வேண்டும் என்றார் அண்ணா.

பாரதத்தோடு இணைந்திருப்பதிலேதான் செந்தமிழ் மக்களின் செம்மையிருக்கிறது என்று கண்ட அண்ணாதுரை பிரிவினைக் கோரிக்கையைக் கைவிட்டதையும் நாம் அறிவோம். தம் நெஞ்சறிந்த உண்மையை அஞ்சாது எடுத்துரைத்த தீரரை இந்நிகழ்ச்சிகளின் போது கண்டோம்.

பிரிவினைக் கோரிக்கையைக் காலமறிந்து கைவிட்டுப் பெரும் ராஜதந்திரி என்ற பெயரையும் பெற்று விட்டார்.

1962ம் ஆண்டு தேர்தலில் அண்ணாதுரை அவர்கள் காஞ்சீபுரம் சட்டமன்றத் தொகுதிக்கு நின்றார். தேர்தல் பிரசாரம் முடிய வேண்டிய கடைசி நாளன்று, அண்ணாதுரை ஸர் ஏ. ராமசாமி முதலியார், ராஜாஜி ஆகிய மூவரும் பேச ஏற்பாடு செய்திருந்தார்கள். அன்று காஞ்சீபுரம் பொங்கி வழிந்தது. காஞ்சீபுரத்திலிருந்து ஐம்பது அறுபது மைல் சுற்றளவிலுள்ள அத்தனை கிராமங்களிலிருந்தும் ஏராளமான மக்கள் குழுமியிருந்தார்கள். ராஜாஜி அண்ணாதுரையை ஆதரித்துப் பேசும் அதிசயத்தைக் காணவென்றே கூடியிருந்தார்கள். அன்று அம்மூவர் பேச்சையும் கேட்டவர்கள் கொடுத்து வைத்தவர்கள்!

அன்று அண்ணா கடைசியில் பேசியபோது கூறிய மொழிகள் இன்றும் என் காதுகளில் ஒலிக்கின்றன : ராஜாஜியைப் பற்றித் தமக்குத் தவறாக எடுத்துக் கூறப்பட்டு, அவற்றின் மீது தாம் இதுகாறும் பேசி வந்ததற்கு ரொம்பவும் வருத்தப்பட்டார். உள்ளம்

நெகிழ்ந்து பேசினர். ராஜாஜி இன்று தமக்கு ஆதரவாகப் பேச வந்திருப்பதே போதும், அது தேர்தல் வெற்றியைவிடப் பெரிது என்று கூறினர்.

அரசியல் துறையில் யாரேதாம் முன்னல் பேசி வந்தது தவறு என்று லட்சக்கணக்கான மக்கள் குழுமியிருக்கும் கூட்டத்தில் ஒப்புக் கொண்டு வருத்தப்பட்டிருக்கிறார்கள் ? இது ஒன்று போதும் அவர் மனம் என்றும் உண்மையையே நாடி வந்தது என்பதையும் அதனைப் பகிரங்கமாக வெளியிடுவதில் சிறிதும் தயங்கியதில்லை என்பதையும் காட்டுவதற்கு!

மற்றெரு பண்பு, வைதாரையும் வாழ வைக்கும் பண்பு. அரசியல் மேடையில் அவரை வைதவர்கள் எத்தனையோ பேர். ஆனல் அவர் யாரையும் பதிலுக்குக் கடுஞ்சொல் சொல்லி அறியாதவர் !

அவர் உண்மை வழி நின்றதால், தவறு இழைத்தால் அதனைத் திருத்திக் கொள்ளும் பரந்த மனம் அவருக்கு இயல்பாகவே இருந்ததால் தம்மை வைதாரைப் பற்றிக் கவலையின்றியிருந்தார்.

அண்ணுதுரை அவர்கள் உண்மையான ராஜதந்திரிக்கு வேண்டிய எல்லா குணங்களையும் பெற்றிருந்தார். உயர்ந்த கொள்கையில் நாட்டம். ஆனல் மூர்க்கப் பிடிவாதமின்றித் தளர்ந்து கொடுக்கும் பண்பு. எல்லாருக்கும் இனியர். எனினும், காரியத்தில் உறுதி. பெரியோரைப் பேணிக் கொள்ளுதல், சிறியவர்களை அன்பில் அமிழ்த்தித் தமக்கு உயிருக்கு உயிராக்கிக் கொள்ளுதல் — இத்தகைய எல்லாக் குண நலன்களையும் பெற்றவர் அண்ணு.

ராஜாஜி திராவிட முன்னேற்றக் கழகத்தின் உதவியுடன் காங்கிரஸைத் தகர்க்க முயன்று வருவதைக் காங்கிரஸார் மிகவும் கேலி செய்து எதிர்த்து வந்தனர்.

இது பற்றி, ராஜாஜி சென்னை லட்சுமிபுரம் இளைஞர் சங்கத்தில் பேச நேர்ந்த போது, ''ராவணனைத் தாக்க ராமர் தனக்கு ஓர் உதவியும் கிடைக்காமல் வானர சேனையைத் திரட்டிக் கொண்டு போனற் போல், நான் ஏதோ தி. மு. க.வின் உதவியைப் பெறுவதுகூட இந்தக் காங்கிரஸ்காரர்களுக்குப் பொறுக்கவில்லை'' என்ருர்.

அப்பொழுது காங்கிரஸுக்குப் பெரும் துணையாக இருந்த திரு ஈ. வெ. ரா அவர்கள், ''ராஜாஜி உங்களைக் குரங்கு என்று சொல்லி விட்டார்'' என்று திரித்துக் கூறிப் பெரும் கிளர்ச்சி செய்தார். அப்போது அண்ணுதுரை காஞ்சி ஏட்டில் சுமார் ஆறு பக்கங்களுக்கு மேல் ராஜாஜி என்ன சொன்னுர் என்பதை விளக்கியும் தமது நிலையை விளக்கியும் எழுதிய கட்டுரை ஒன்று போதும் அவருடைய அபாரமான வாதத் திறமையை அறிவதற்கு. அது மட்டுமா ? எவ்வளவு ஆழமாகவும், நுட்பமாகவும் ராமாயணத்தை அண்ணு அறிந்து வைத்திருந்தார் என்பதனை அறிவதற்கும் அந்தக் கட்டுரையே சான்று !

ராஜாஜி எது சொன்னலும் அதைத் திரித்துக் கூறிப் பெரும் கிளர்ச்சி நடத்த தமிழ் நாட்டில் ஒரு கூட்டம் இல்லா விட்டால் இன்னெரு கூட்டம் எப்போதுமே தயாராக இருந்து வந்திருக்கிறது. ஆகவே அதை ராஜாஜி பொருட் படுத்துவதில்லை. ஆனல் மேற்கூறிய கூற்றுக்கு அண்ணுதுரை அளித்த அந்தப் பதிலைப் படித்தபோது ராஜாஜியின் உள்ளமே நெகிழ ஆரம்பித்தது. ''எவ்வளவு நன்ருக எழுதி யிருக்கிருர்'' என்ருர்.

இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள். இந்தப் புறப்படலத்திலே ராஜாஜி, அண்ணுதுரை மறைந்ததும் கூறிய வார்த்தைகளைப் பார்க்க வேண்டும். 'அண்ணுதுரையின் மறைவினல் நான் அடைந்த துயரம் எவ்வளவு என்பது வார்த்தைகளால் சொல்லக் கூடியதல்ல' என்றல்லவா கூறினர் ராஜாஜி.

—எஸ். வி. எஸ்.



**இம்மாதம் 13-ம் தேதிக்கும் அறிஞர் அண்ணுவுக்கும் ஒரு நெருங்கிய சம்பந்தம் உண்டு, என்னவென்று ஊகிக்க முடிகிறதா ?**

அறிஞர் அண்ணு பிறந்த வருடம் 'சௌமிய' வருடம். அதலால் அவர் ஆரம்பத்தில் 'சௌமியன்' என்ற புனை பெயரில் கதைகள் எழுதி வந்தார். அவர் பிறந்த அந்த 'சௌமிய' வருடம் தான் ஏப்ரல் 13ந் தேதி பிறந்தது. மறுபடியும் அந்த வருடத்தை எட்டிப் பார்க்காமலே அண்ணு அமரராகி விட்டார் !

- சுதாகரன்

# விளையாட்டு

**தா**யார் ஜானகி அம்மாளைப் போலவே மகன் ரங்கராஜனும் அழகுதான். அவன் முக காந்தியைப் பற்றி நினைக்கிறபோது, 'ஒரு நூற்றாண்டு காலவாழ்வில் ஒரு கணம் பார்த்திருந்தாலும் சரி, ஒரு லட்சம் முகங்களுக்கிடையில் ஒரு முகமாகப் பார்த்திருந்தாலும் சரி, ஜன்மத்துக்கும் மறக்க முடியாத ஒரு 'முகம்' என்று பின்னொரு சமயத்தில் அவனிடமே ஒருத்தி வாய் விட்டுச் சொல்லத் துடித்தாள். ஆனால் சொல்ல முடியவில்லை; சொல்லாமலும் இருக்க முடியவில்லை. தன்னுடைய ஈடுபாட்டையும் பரவசத்தையும் எப்படியேனும் வெளிப்படுத்தியே தீரவேண்டும் என்ற ஒரு கட்டாயமே அன்று உண்டாகி விட்டது.



அவனை விட்டு விட்டுத் தன் வீட்டுக்கு வந்தாள். தன் தங்கையை அழைத்து வைத்துக் கொண்டாள். அவனுடைய முகத்தைப் பற்றிச் சொல்ல அங்கும் அவளுக்கு வெட்கம். அதனால் ஒரு சிறு மாறுதலோடு அந்த விஷயத்தைச் சொன்னாள். அவனுடைய முகத்துக்குப் பதிலாக அவனுடைய அம்மாவின் முகத்தைப் பற்றிக் கூறினாள்.

''இந்த வயசிலும் இப்படி ஒரு பொம்பிளை இருப்பது பெரிய அதிசயம்! தலையிலே கொஞ்சம் நரை இருக்கு. அதுவுமே ஓர் அழகாய்த்தான் இருக்கு — அந்த முகத்துக்கு. கண்பட்டை ஒவ்வொன்றும் எவ்வளவு நீளம் தெரியுமா? எவ்வளவு பெரிய கண்! சந்தனமா இருக்கு முகமும் உடம்பும். அதிலே இந்தப் பெரிய கண் கருகருன்னு இருக்கிற அழகைப் பார்த்துக்கிட்டே இருக்கலாம் போலிருக்கு! உடம்பு அப்படித் தங்கம்! கண் அப்படிக் கறுப்பு! உதடு அப்படிச் சிவப்பு!''

உடனே தங்கை சொன்னாள்: ''மூக்கு நுனியும் காது விளிம்பும்கூடச் சிவந்து தான் இருக்கு, பவளம் மாதிரி. பிள்ளையும் அதே மாதிரி பெத்து வைச்சிருக்கிறாள்! அவர் முகத்தைத்தான் பாரேன்! அவரைப் பார்த்தால் அம்மாவைப் பார்க்க வேண்டாம்! அப்படியே அச்சிலே வார்த்த மாதிரி!''

அக்காளுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. தான் சொல்ல நினைத்து ஆனால் சங்கோசத்தினால் மறைத்த விஷயத்தைத் தங்கை தன் வாயாலேயே சொல்லி விட்டதைக் கேட்கக் கேட்க, அவள் கண்கள் மலர்வதும், சொக்கி ஒடுங்குவதுமாக இருந்தன. 'ஐயோ! இப்படியே இவள் வருணித்துக்கொண்டிருக்க மாட்டாளா? நாம் கேட்டுக் கொண்டே இருக்க மாட்டோமா?' என்று அவள் ஏங்கவே செய்தாள்.

இது சில மாதங்களுக்குப் பிறகு நடக்கப் போகிற காரியம். பேசப் போகிற பேச்சு. அந்த இரு பெண்களும் அந்தச் சிறு தெருவின் கோடி வீட்டுக்கு முந்திய வீட்டில் குடியிருந்தார்கள். அந்த நேரத்தில் அவர்கள் இருவரையுமே வாசலில் பார்க்கலாம் என்று ரங்கராஜனுக்குத் தெரியும். அவர்களைப் பார்ப்பதற்கு முன்பே ஒரு சிறு முன்னுரை கொடுத்தால் நன்றாக இருக்கும் என்று அவனுக்குத் தோன்றியது.

''தங்கம்! கொஞ்சம் இப்படி வா. இதோ இந்த வரிசையிலேயே ஒரு வீடு இருக்கு. கோடி வீட்டுக்கு முந்தின வீடு. போறப்போ அங்கே கொஞ்சம் திரும்பிப் பார்...''

''ஏன்? அங்கே என்ன அதிசயம்?'' என்று கேட்டாள் தங்கம்.

''மெல்லப் பேசு! தெருவிலேகூட மைக்கிலே பேசறாப்போல ஏன் பேசறே? ....அங்கே உன்னைப் போலவே ஒரு பெண் இருக்கிறாள். உன் வயசுதான் இருக்கும். அசப்பிலே பார்த்தா நீதான் என்று நினைக்கிறாப்போல் இருக்கும். தினமும் பார்த்துக்கிட்டு வர்றேன்.''

''தினமும் பார்க்கிறயா? சரிதான்! ஒரு நாளைக்கு ஒன்பது தடவை பார்க்கிறயா? தொண்ணூறு தடவை பார்க்கிறயா?...என்ன சுந்தரி, கேட்டாயா?''

தங்கம் மேற்கொண்டு பேசாமல் இரு உதடுகளையும் உள்ளே வளைத்து வாயை இறுக மூடிக் கொண்டாள். நாட்டு வழக்கில் சொல்வது போல் 'மட்டியைக் கடித்துக் கொண்டு' சிரிக்கவும் செய்தாள்.

அந்த வீடும் நெருங்கி விட்டது. ரூபியைத் தவிர மூன்று பேரும் அந்த வீட்டைத் திரும்பிப் பார்த்தார்கள். பக்கத்தில் இரண்டு பெண்களோடு — தங்கைகளோடு — நின்றதால் ரங்கராஜனும் தைரியமாக நிமிர்ந்து பார்த்தான். வீட்டு வாசலில் அப்போது ஒரு பெண் அல்ல; இரண்டு பெண்கள் நின்றார்கள். இருவருமே தங்கத்தின் ஜாடையில் இல்லை. வேறு ஜாடைதான். மூத்தவள் உயரமாக இருந்தாள். அவள் பார்வையில் பெண்மையை விடக் காம்பீர்யம் மேலோங்கியிருந்தது. முகத்தில் சலனமே இல்லாமல் அந்த மூவரையும் அவள் பார்த்துக் கொண்டு நின்றாள். சின்னவள்தான் குனிந்தும், நிமிர்ந்தும் பக்கவாட்டிலும் பராமுகமாக ஒரு நாலைந்து விதங்களில் இவர்களைப் பார்த்தாள்.

தெருக் கோடிக்கு வந்து திரும்பும் போது தங்கம் ஒரு முறை திரும்பிப் பார்த்தாள். அந்த இரண்டு பெண்களும் அங்கேயே நின்று கொண்டிருந்தார்கள்.

''புதுசா குடி வந்திருக்கிறார்களோ, ராஜா?'' என்று சுந்தரி கேட்டாள்.

''இப்பத்தான். ஜாஸ்தியாப் போனா இரண்டு மாசம் ஆகியிருக்கும்...''என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, ''ராஜா! என் ஜாடைன்னு சொன்னியே? ஒருத்திக்குக் கூட என் ஜாடை இல்லியே! பெரிய நெட்டைக் கொக்கா வளர்ந்திருக்கிறா!...'' என்றாள் தங்கம்.

''நல்ல வளர்த்தி. ரொம்ப அழகுன்னும் சொல்ல முடியாது. ஆனாலும்

சிக்கு பிடிக்காத,

எண்ணெய் வழியாத கூந்தல் டானிக்

# கால் கெமிகோவின் காந்தரிடின் ஹேர் ஆயில் காந்தரால்

ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்

அழகிய புதிய
அட்டைப்பெட்டியில்
காந்தரால்
கிடைக்கும்






இது ஒரு கல்கத்தா கெமிகலின் தயாரிப்பு

CCK-4765 TM

# ஃபாஸ்ஃபோமின்



# சக்தியை அதிகரிக்கிறது.



# பசியைத் தூண்டுகிறது.

# வலிவைப் பெருக்குகிறது.



# நோய்களை எதிர்க்கும் சக்தியை கூட்டுகிறது.

**சுருங்கச் சொன்னால் —
குடும்பத்தில் அனைவரும் திட
ஆரோக்கியத்துடன் திகழ
உதவுகிறது ஃபாஸ்ஃபோமின்**




ஃபாஸ்ஃபோமின்... 'பி' காம்ப்ளெக்ஸ் வைட்டமின்களும்,
பலவகை கிளிஸரோஃபாஸ்பேட்டுகளும் அடங்கிய.
பழரஸ மணம் கமழும் பச்சைநிற டானிக்.

SQUIBB® ® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பொரேடெட்டின் ரிஜிஸ்டர்ட் டிரேட் மார்க்காகும்.
காரம்சந்த் ப்ரேம்சந்த் ப்ரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றவர்கள்.

SARABHAI CHEMICALS — Shilpi SC 50 A /57 Tam

கொக்கு மாதிரியா இருக்கிறு?'' என்ருள் சுந்தரி.

''அடுத்த பெண்ணை அழகி என்று கலபத்தில் எந்தப் பெண்தான் ஒப்புக் கொண்டிருக்கிருள்? அந்தப் பேச்சே கிடையாதே. உலகத்திலே தான் ஒருத்தி தான் அழகு! மதுரை மீனுட்சி கூட அடுத்தபடிதான்! தங்கம் மட்டும் வேறு விதமா எப்படி இருப்பாள்?''

ரங்கராஜன் இவ்வாறு சொல்லவே தங்கம் அவனை மடக்கினுள். ''ராஜா! நீ ஒண்ணும் கோவிச்சுக்காதே! அவங் களை நான் ஒண்ணும் குறைச்சுப் பேசல்லே. ஒருத்தி ரம்பை; இன் னெருத்தி திலோத்தமை. போதுமா?''

இவ்வாறு சொல்லிவிட்டுச் சுந்தரி யைப் பார்த்துத் திரும்பி, ''சுந்தரி! எத் தனையோ பெண்களை நீ குறிச்சுக் கட் டினே, 'என் அண்ணன் அழகுக்கு இவ எந்த மூலே? காலிலே கட்டியடிக் கக் காணுமா?'ன்னு கழிச்சுக்கிட்டே வந்தே. உன் பேச்சைக் கேட்டுக்கிட்டு ராஜாவும் இதுவரையில் தனிக் கட் டையா இருந்தான். எத்தனை நாளைக் குத்தான் இப்படி இருப்பான்? நீ திருச் சிக்குப் போயிட்டே என்கிற தைரி யத்திலே அவனு 'செலக்ட்' பண்ண ஆரம்பிச்சுட்டான். இனி என்ன செய் யப் போறே நீ?'' என்று பரிகாசக் குரலில் கேட்டாள் தங்கம்.

''தங்கம்! நான் ஒண்ணும் 'செலக்ட்' பண்ணிடல்லே. சுந்தரிக்காயின்னு பத் தியம் முறிஞ்சிட்டது என்கிறே!''

''சும்மா இரு நீ! முழுப் பூசணிக் காயைச் சோற்றிலே மறைக்காதே. என்கிட்ட அது நடக்கவே நடக்காது. அந்தப் பெண்களைப் பார்க்கிறப்போ உன் மூஞ்சி போன போக்கை நானில்லே பார்த்தவள்?... இப்ப தெரியுது உன் தந்திரம். அதுகள் அழகை நாங்களும் பார்த்து மெச்சணும் என்கிறதுக்காகத் தானே 'என் ஜாடையிலே ஒருத்தி இருக்கிருள்'ன்னு கயிறு விட்டிருக்கிறே! அப்பத்தானே நாங்க கவனிச்சுப் பார்ப் போம்! உன் தந்திரம் எனக்கா தெரி யாது?''

அவள் பேசியது சுந்தரிக்கும் அவ னுக்கும் ஒரு சுகானுபவமாக இருந்தது.

''ரெண்டு பேருமே அழகாத்தான் இருக்கிறுங்க'' என்ருள் சுந்தரி.

''நீயும் அண்ணன் கட்சியிலே சேர்ந் திட்டயா?... என்ன அழகோ? அந்த அழகு என் கண்ணுக்கு மட்டும் ஏன் தெரிய மாட்டேங்குதோ? அவங்களை அழகுன்னு சொல்ற நீ அந்தச் சோழ வந்தான் பெண்ணை வேண்டாம்னு அப்போ எப்படிச் சொன்னே? கரும்பு கசக்குது, வேப்பங்காய் இனிக்குதுன்னு எப்போ பேசப் படிச்சே சுந்தரி?''

சோழவந்தான் பெண்ணை வேண் டாம் என்று சுந்தரி அப்பொழுது சொன்னதற்குக் காரணம், 'கரும்பு கசந்த'தனல் அல்ல; அவளுடைய அப்பா ஒரு பொல்லாத ஆசாமி. அத ஞல் அவருக்கு ஊரில் நல்ல பெயர் இல்லை, பெரிய வம்புக்காரன்; முரடன், தான் பிடித்த முயலுக்கு மூன்று கால் என்று சாதிப்பவன்' என்றெல்லாம் ஊருக்குள் கீர்த்தி சம்பாதித்திருப்பவர் என்று அருணசல முதலியார் சொல்லித் தடுத்ததனல்தான் அந்தப் பெண்ணை வேண்டாம் என்று சுந்தரி கைவிட்டாள். இந்த உண்மைக் காரணத்தைச் சொல் லித் தங்கத்தின் கூற்றைச் சுந்தரியோ, ரங்கராஜனே மறுத்துப் பேசவில்லை. எதற்கு என்று விட்டு விட்டார்கள்.

வீட்டு வாசலில் நின்ற அந்த இரண்டு பெண்களுக்கு எந்த ஊர், அவர் களுடைய அப்பாவுக்கு என்ன வேலை என்பது போன்ற விவரங்களைக் கேட் டாள் சுந்தரி. அதெல்லாம் தனக்குத் தெரியாது என்று சொன்னன் ரங்க ராஜன்.

''நாளையே விசாரிச்சால் போச்சு. நானே போய் விசாரிச்சுத் தெரிஞ்சுக் கிட்டு வர்றேன்'' என்று தங்கம் சொன் ஞள். ''போய் விசாரிக்கட்டுமா, ராஜா?'' என்று அவள் கேட்டதும், ''விசாரியேன். என்ன தப்பு?'' என்று அவன் பதில் சொன்னன்.

''அப்படிச் சொல்லுடா ராஜா தேசிங்குன்னுனும்! இது ரொம்ப முத்தின சமாசாரமா இருக்கும் போலிருக்கே, சுந்தரி!''

இப்படி மனம் கொள்ளாத சந் தோஷத்துடனும் உற்சாகத்துடனும் பேசிக் கொண்டே கோவிலுக்குப் போனர்கள். அம்மனைத் தரிசித்து விட்டு, ஆடி வீதிக்கு வந்து, தரை சுடாத ஓரிடத்தில் வந்து உட்கார்ந் தார்கள். அங்கே தாழ்வாரம் போன்ற ஒரு கட்டுமானம் இருந்தது. சுகமாகக் காற்றும் அடித்துக் கொண்டிருந்தது.

ஒரு மாலைப் பொழுதை இவ்வளவு சந்தோஷமாக ரங்கராஜன் கழித்து எத்தனையோ மாதங்களாகி விட்டன. நடுநடுவே தங்கம் ஊரிலிருந்து வந்து நாட்கணக்கில் தங்கி யிருந்திருக்கிருள் என்ருலும், சுந்தரியும் உடன் இருந் தால்தான் அவளுடைய பேச்சும் தமா ஷும் அமர்க்களமாக இருக்கும் என் பது அப்பொழுது தெரிந்தது.

சுகமான காற்றில் ரூபி தூங்கிவிட் டாள். விளக்கு வெளிச்சத்தில் அவள்

முகத்தையே கூர்ந்து பார்த்துக்கொண்டிருந்தான் ரங்கராஜன்.

''சுந்தரி! ஒரு விதத்திலே உனக்கும் உன் பெண்ணுக்கும் ஒரு பெரிய ஒற்றுமை இருக்கிறது. உன்னைப் போலவே உன் பெண்ணும் ஒரு பெரிய பாக்யசாலி. அப்பா ஜாடை என்கிறன்னு இருக்கு பாரு!''

''அதனாலே?''

''அதனாலேதான் அதிர்ஷ்டசாலின்னு சொல்றேன். அப்பா ஜாடையிலே பிறக்கிற பெண்களெல்லாம் அதிர்ஷ்டசாலிகளா யிருப்பாங்கன்னு சொல்வாங்களே, நீ கேள்விப்பட்டதில்லையா?''

''அதே மாதிரி அம்மா ஜாடையிலே பையன் பிறக்கிறதைப் பத்தி ஏன் ஒண்ணும் சொல்லாமல் விட்டாங்கன்னு தெரியல்லே...'' இதைச் சொன்ன சுந்தரி ஒரு பெருமூச்சு விட்டாள்.

''சுந்தரி! அது அதிர்ஷ்டம் மட்டுமில்லே. அதுக்கும் மேலே. ராஜா என்ன தவம் பண்ணினானோ முன் ஜன்மத்திலே! பழனிக்கு எத்தனை பால் காவடி எடுத்தானோ?'' என்று தங்கம் சொல்லிவிட்டு, அவனையும் ஒரு முறை திரும்பிப் பார்த்தாள்.

ரங்கராஜனுக்குச் சிறிது சங்கோசமாக இருந்தது. அம்மாவின் அழகை நினைத்துத் தனக்கு ஏற்படும் பெருமிதத்தை விட அதிகமாகத் தன்னை நினைத்துச் சகோதரிகள் பெருமிதம் அடைவதைக் கண்டு அவனால் ஒன்றும் பேச முடியவில்லை. சற்று மௌனமாக இருந்துவிட்டு அவன் சொன்னான்:

''தங்கம்! நான் அம்மா மாதிரி இருக்கிறேன் என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால்... அந்தக் குணத்திலே நூத்திலே ஒரு பங்குகூட என் விடத்திலே இருக்கும்னு தோணவில்லை. அவள் எங்கே? நான் எங்கே? நான் அழகா யிருக்கிறேம் என்கிறது அவனுக்குத் தெரியுமோ தெரியாதோ? ஆனா உலகத்திலே எதைப் பார்த்தாலும் அது அழகாவே இருக்கிறதா அவள் கண்ணுக்குப் படுது. எனக்கு அப்படிப் படல்லையே; நான் அழகையும் பார்க்கிறேன்; அருவருப்பையும் பார்க்கிறேனே, தங்கம்? என்னைப் போய் அம்மாவோட ஒப்பிட்டுப் பேசுகிறீங்களே!''

அவனும் ஒரு பெருமூச்சு விட்டான். கோவிலின் கோபுரங்கள் இரண்டொன்றைத் திரும்பி அண்ணாந்து பார்த்தான். பிறகு சொன்னான்:

''தங்கம்! அம்மாவோட குணம் எப்படிப்பட்டது என்கிறது உனக்கும் தெரியும். ஆனா ஒரு கோடிதான் தெரியும். நாளைக்கு விடியட்டும். அப்போ நீ ஒரு காட்சியைப் பார்க்கப் போறே. மீனாட்சியம்மனை நம்ப வீட்டு வாசலிலேயே நீ பார்க்கப் போறே'' என்று அவன் பரவசத்தோடு சொன்னான்.

## அத்தியாயம் 3

அரசடி விநாயகர் கோவில் தெரு, தெற்கு ஆவணி மூல வீதியில் போய் முடியும் இடம். அங்கே மூலை வீட்டுக்கு அடுத்த வீட்டின் வாசலில் நின்ற பெண்கள் இருவரும் ரங்கராஜனை அநேகமாக நாள் தவறாமல் பார்த்திருக்கிறார்கள். ஆனால் அவன் இரண்டு பெண்களோடு நடந்து செல்வதை அன்றுதான் முதன் முதலாகப் பார்த்தார்கள். அந்தப் பெண்கள் யார்? ஒருத்தி கைக் குழந்தையோடு போனாளே அவள் யார்? ரங்கராஜன் கல்யாணமானவன்தானோ? —இப்படியெல்லாம் அந்தப் பெண்கள் இருவரும் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள். ஆனால் அவர்களால் பரஸ்பரம் கேள்விகளைக் கேட்டுக் கொள்ள முடிந்ததே தவிர, ஒரு கேள்விக்குக் கூட விடை தெரிந்துகொள்ள முடியவில்லை. இரண்டு மாதங்களுக்கு முன் ஒரே தேதியில் அந்தத் தெருவுக்குக் குடி வந்த இந்தச் சகோதரிகளுக்கு, தெருவில் உள்ளவர்களைப் பற்றி ஒரே அரைகுறையான தகவல்கள் தெரிந்திருக்க முடியும்; அல்லது தெரியாமல் இருக்க முடியும். அப்படியிருக்க யாருக்கு யார் விடை கூற முடியும்? விளக்கம் கூற முடியும்?

சின்னவள் — கலா — ''யாருக்குத் தெரியும்? இதையெல்லாம் போய் அடுத்த வீட்டில் விசாரிக்கவா முடியும்?'' என்று சொல்லிவிட்டு அப்பால் போய்விட்டாள். அந்த விஷயத்தையும் அதோடு மறந்துவிட்ட மாதிரியே விஜயாவுக்கு — மூத்தவளுக்குத் தோன்றியது. விஜயாவுக்கு அது ஓர் ஆச்சரியமாகக்கூட இருந்தது. நாகராஜன் சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தை, அதிலும் இன்னது என்று தெரிந்துகொள்ள முடியாத ஒரு விஷயத்தை இப்படி அலட்சியமாக மறந்து விடுவதற்குக் கலாவினால் எப்படி முடிகிறது என்று ஓர் ஆச்சரியம் அவளுக்கு.

'கலா ஒரு தனிப் பிறவிதான். பெண்ணாகப் பிறந்தவர்கள் தேவையில்லாமலே அக்கம் பக்கங்களைப் பற்றித் துருவித் துருவி விசாரித்துத் தெரிந்து

கேசத்தை நன்கு பராமரிப்பது நல்ல அழகுடன் விளங்க உதவுகிறது!

# பெங்கால் கெமிகல்ஸின்

# காந்தாரிடைன்

## ஹேர் ஆயில்





கேசத்தைப் பற்றி அக்கறையுள்ளோர் பெங்கால் கெமிகல்ஸ் காந்தாரிடைன் ஹேர் ஆயிலைத்தான் நினைக்கிறார்கள். பிசுக்கற்றது. கேசம் நன்கு பளபளப்பாகவும், நீண்டு அடர்த்தியாகவும் வளர்கிறது. கேசம் உதிர்வதைத் தடுக்கிறது. ஒவ்வொரு வீட்டிற்கும் மிகவும் இன்றியமையாதது.

**பெங்கால் கெமிகல்**

கல்கத்தா ○ பம்பாய்
கான்பூர் ○ டெல்லி

---










**Exide**

தி ஜெனரல் எலெக்டரிக் கம்பெனி
ஆப் இந்தியா பிரைவேட் லிட்.
சென்னை, கோயமுத்தூர், பெங்களூர், எர்ணாகுளம், செகந்தராபாத்.

கொள்வதில் குறியாக இருப்பார்கள். சம்பந்தமில்லாத சாதாரணமான பேர் வழிகளைப் பற்றியே அப்படி விசாரிக்கக் கூடிய குணம் எல்லோரிடமும் இயற்கையாகப் படிந்திருக்க, இவள் — 'இவரைப் பற்றிய ஒரு விஷயத்தையே தெரிந்து கொள்வதில் அக்கறையில்லாமல் போய்விட்டாளே' என்று ஆச்சரியப்பட்டாள் விஜயா.

அந்த இரு பெண்களும் யார்? கைக் குழந்தையோடு போனவள் யார்? ஒரே உற்சாகத்துடன் சிரித்துப் பேசிக் கொண்டு போகிறரே அவர்?

வேண்டுமென்றே இதை ஒரு புதிராக்கிக் கொண்டு யோசித்து யோசித்துப் பார்த்தாள் விஜயா.

அவன் கல்யாணமானவன் என்று கருதுவதற்குத்தான் சந்தர்ப்பங்கள் சாட்சியம் அளித்தன.

'ஒருவேளை சகோதரிகளாகவும் இருக்கக்கூடும். உறவினர்களாகவும் இருக்கலாம். ஏன் இருக்கக் கூடாது? ஓர் ஆணுக்குப் பக்கத்தில் நடந்து செல்பவள் மனைவியாகத்தான் இருக்க வேண்டும் என்று என்ன கட்டாயம்?'

அவனும் அவனோடு சென்ற சகோதரிகளும் திரும்பி வரும்வரை விஜயா அங்கேயே காத்துக் கொண்டு நிற்கவில்லை. உள்ளே போய்த் தன் வேலைகளைக் கவனித்தாள். ஆனால் அந்த நினைவை மட்டும் அவள் மறந்துவிடவில்லை.

ரங்கராஜனோடு அந்தப் பெண்கள் மட்டுமல்ல, வேறு யார் யார் சம்பந்தப்பட்டாலும் விஜயாவுக்கு அது புரிந்து கொள்ள முடியாத ஒரு புதிராகத்தான் இருந்தது.

அன்று இரண்டு பெண்களோடு அவனைப் பார்த்தாள்.

இருபது இருபத்தைந்து நாட்களுக்கு முன் ஒரு பைத்தியக்காரனுடன் அவன் பேசுவதைப் பார்த்தாள்.

இந்த இரண்டு சந்தர்ப்பங்களைத் தவிர மற்ற நாட்களில் எல்லாம் அவன் தனியாக நடந்து செல்வதையே அவள் பார்த்திருக்கிறாள்.

அந்தப் பைத்தியக்காரனுக்கு அதிகமாகப் போனால் முப்பது வயது இருக்கும். இடுப்பில் ஒரு கந்தல். இதைத் தவிர அவனிடம் வேறு உடைமை இல்லை. தகரக் குவளைகூட அவன் வைத்திருக்கவில்லை. தலை முடி சுற்றிலும் பரந்து கிடந்தது. பெரும்பாலும் அது முகத்தைப் பூரணமாக மூடிக் கொண்டும் கிடக்கும். அவசியம் நேரும் போது திரையை விலக்குவது போல் தலை முடியை விலக்கிக் கொண்டு அவன் பார்ப்பான். மற்றப் பைத்தியக்காரர்களைப் போல் அவன் எவ்விதக் கோணங்கித்தனமும் பண்ணிக் கொள்ளவில்லை. கழுத்தில் பாசிமணி மாலைகள் போட்டுக் கொள்ளவில்லை. கையில் பிளாஸ்டிக் பட்டைகளையும், தோல் வார்களையும் கடிகாரத்துக்குப் பதிலாகக் கட்டிக் கொள்ளவில்லை. தலையில் கோழி இறகுகளைச் செருகி அலங்கரித்துக்கொள்ளவோ நெற்றி நிறைய குங்குமத்தைக் குழைத்துப் பூசிக்

அட்டைப்பட விளக்கம்

## வளர் கலை

" பொம்மைக்கும் பொம்மைக்கும் கல்யாணம்
பூலோகமெல்லாம் கொண்டாட்டம் "

— கவிமணி

மனித வாழ்க்கையில் எவ்வளவோ கஷ்டங்கள்.

இந்தக் கோடை காலத்தில் குளம், குட்டை, கேணி எல்லாம் வறண்டு போய் விட்டன. மக்கள் குடிக்க ஒரு குடம் தண்ணீருக்காக எங்கெங்கோ ஓடியாடி அலைந்து கொண்டு வரும் காட்சியைப் பார்க்கிறோம். ஆம்! நேரடியாக வாழ்க்கையில் பார்க்கும் போது மனத்துக்குப் பெரும் துயரம் விளைகிறது.

அதனையே கலை வடிவத்தில், சித்திரமாகவோ, சிற்பமாகவோ, பொம்மையாகவோ பார்க்கும்போது, 'ஆகா! கலைஞன் எவ்வளவு அழகாகச் செய்திருக்கிறன்' என்று மகிழ்கிறோம். அந்த மகிழ்ச்சியை நண்பர்களுடன் பகிர்ந்து கொள்கிறோம். இதுதான் கலை புரியும் ரஸவாதம்.

தாயும் தந்தையும் சண்டை போடுவதைப் பார்க்கும் குழந்தைகள் பொம்மைக் குடித்தனம் நடத்தி, தாய் பொம்மையும் தந்தை பொம்மையும் சண்டை போடுவது போல் பேசி விளையாடுவார்கள்.

இதைப் பார்க்கும் பெற்றோர் அடையும் ஆனந்தம் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லி முடியுமா?

வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் பொம்மைக் கலை வாழ்க, வளர்க! இந்தக் கலைப் பொம்மையை வண்ணப் படத்தில் வழங்கியவர்: **வித்யாஶ்ரதா.**

கொள்ளவோ இல்லை. தெருவில் போகும்போது அவன் கண்ட கண்ட குப்பைகளைக் கிளறிப் பார்ப்பதையோ, தானகப் பேசிக் கொண்டு போவதையோ விஜயா ஒரு நாளும் பார்த்ததில்லை.

அவன் தினமும் ஒரு தடவையாவது தெரு வழியே போவான்; வருவான். அந்தப் பகுதிக்கு நெடுங்காலமாக அவன் பரிச்சயமானவன் என்பதற்கு இரண்டொரு அடையாளங்களும் உண்டு. அவனைப் பார்த்துத் தெரு நாய்கள் குரைப்பதில்லை; சிறுவர்கள் பரிகாசம் செய்வதுமில்லை.

அந்தப் பைத்தியக்காரன் ஒரு நாள் பத்து மணிக்குத் தெரு வழியே நடந்து வந்து கொண்டிருந்தான். விஜயாவின் வீட்டையும் தாண்டிப் போய்விட்டான். நாலைந்து வீடுகள் தள்ளி அவன் போய்க் கொண்டிருந்த போது ரங்கராஜன் எதிர்த் திசையிலிருந்து வந்தான். தெருவில் எத்தனையோ பேர் போவதும் வருவதுமாக இருந்தார்கள். ஆனல் ஒருவர் கூட அந்தப் பைத்தியக்காரனைத் திரும்பிப் பார்க்கவில்லை. ரங்கராஜன் ஒருவன்தான் அவனைப் பார்த்து நின்றான். அவனிடம் பேசினான். பேச்சுக் குரல் விஜயாவுக்கும் கேட்டது. வியப்போடு அந்தச் சந்திப்பைக் கூர்ந்து பார்த்தாள்.

ரங்கராஜன் அவனுக்கு என்னவோ கொடுப்பதற்குக் கையை நீட்டினான். பைத்தியக்காரன் அதை வாங்கிக் கொள்ளவில்லை என்பதோடு, அந்தக் கணத்திலேயே முகத்தைத் திருப்பிக் கொண்டு நடக்கத் தொடங்கிவிட்டான். ரங்கராஜன் ஒருமுறை அவனைக் கூப்பிட்டுப் பார்த்தும் பயன்படவில்லை. கடைசியில் கையில் வைத்திருந்ததைச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு தெற்கு ஆவணி மூலவீதியைப் பார்த்து நடந்து வந்தான்.

விஜயா சற்றுப் பின்வாங்கி உள்ளே தள்ளி நின்றாள். அவள் இவ்வளவு நேரமும் தன்னைக் கவனித்துப் பார்த்துக் கொண்டிருந்ததாக அவனுக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் அவளைத் திரும்பிப் பார்த்திருப்பான்; ஒரு புன்னகை கூடச் செய்திருக்கக் கூடும். அப்படி ஒரு சந்தர்ப்பம் நேராமல் போய் விட்டது. சிந்தனையில் மூழ்கியவனாக நடந்து போய் மூலை திரும்பிவிட்டான்.

பைத்தியக்காரனின் அலங்கோலமும், அழுக்கும், அருவருக்கும் தோற்றமும் ஒன்றுக்குப் பத்தாக விஜயாவின் மனக் கண்முன் தோற்றம் அளித்தன. அந்தப் பைத்தியக்காரன் என்ன, ரங்கராஜனின் பக்கத்தில் வேறு யாரை நிறுத்திப் பார்த்தாலும் அவளைப் பொறுத்தவரையில் அவர்கள் அவலட்சணமாகவே தோன்றுவார்கள்! அந்த நிலையில் இந்தப் பைத்தியக்காரனின் விவகாரம் பூதாகாரமாகப் பெரிதாகத் தோற்றியதில் ஆச்சரியம் ஒன்றுமே இல்லை.

'இவனேடு இவருக்கு என்ன பேச்சு? என்ன உறவு? தெருவில் செல்லும் ஆயிரம் பேரில் இவனை யாருமே திரும்பிப் பார்க்கவில்லை. அவரோ இவனைத் தவிர வேறு யாரையும் ஏறிட்டு நோக்கவில்லை. எப்படித்தான் அவருக்கு மனம் வந்ததோ, இவனையும் பார்க்க! இவனேடும் பேச!'

ரங்கராஜன் அநியாயமாகச் சந்தனத்தைக் கொண்டு போய் — அதுவும் தான் கரைத்துத் தங்கக் கிண்ணத்தில் வைத்திருந்த சந்தனத்தைப் பறித்துக் கொண்டு போய் — சாக்கடையில் கொட்டி விட்டது போல் விஜயா வருந்தினாள். அந்த நாளிலிருந்து அவளுக்கு அந்தப் பைத்தியக்காரனைக் கண்டாலே பிடிக்கவில்லை. ரங்கராஜனைப் பார்க்கும்போது மனசுக்குள் ஒருமாதிரி கோபம்; கோபம் ஏற்படாத சமயத்தில் அனுதாபம்.

ரங்கராஜன் — பைத்தியக்காரன் சந்திப்பைப் பற்றி அவள் கலாவிடமும் சொல்லவில்லை. கண்டனம் பண்ணக் கூட அவளுக்கு மனம் வரவில்லை.

இப்பொழுது அந்தக் 'கோப'மும், அந்த 'அனுதாப'மும் மறைந்து பெரிய புதிரே தலைதூக்கி நின்றது. ரங்கராஜனுடன் சென்ற பெண்கள் யார்? கைக் குழந்தையோடு சென்றவள் யார்?

ரங்கராஜன் கல்யாணமானவராக இருந்தால்...?

விஜயாவுக்கு அன்றைய நிலையில் அது மகிழ்ச்சி தரும் செய்தியாகவே இருந்திருக்கும். மகிழ்ச்சி யளிக்கா விட்டாலும் ஏமாற்றத்தை அளித்திராது. இரண்டு மாத காலம் எட்ட நின்று பார்த்தவள், ஒரு நாள் கூட அவரோடு பேசியதில்லை. இதில் என்ன உறவு ஏற்பட்டிருக்க முடியும்? அவனிடத்தில் அவளுக்கு என்ன உரிமைதான் உண்டாகியிருக்க முடியும்? — இப்படி நினைக்கிற விதத்தில்தான் அப்போதைய அவளுடைய மனநிலை இருந்தது. இல்லையென்றால் அன்றிரவு தூங்குவதற்கு முன் அவளுக்கு இப்படி ஓர் ஆசை ஏற்பட்டிருக்கவே முடியாது.

'அந்தக் குழந்தை — சுந்தரியின் கையில் இருந்த ரூபி — அவருடைய குழந்தையாக இருந்தால், நாள் முழுதும் அதைத் தூக்கி வைத்துக் கொண்டே இருக்க வேண்டும்; கொஞ்ச வேண்டும்; விளையாட வேண்டும்.'

இப்படியும் ஓர் ஆசையா? **(தொடரும்)**



ஆயுட்காலமெல்லாம் உழைப்பதற்காக உத்தரவாதம் கொண்டது ப்ரெஸ்டிஜ்.

# சிறந்த குடும்பக்கலையின் தொடக்கம் ப்ரெஸ்டீஜ்

**Prestige**

**முற்றிலும் அபாயமற்றது:** அதிகபட்ச பாதுகாப்பு சாதனங்கள் உள்ளன.

**தாராளமான இடவசதி:** உங்கள் பாத்திரங்களுக்கோ, ஸ்டீம்-இட்டிலிக்கோ.

**சர்வீஸ்:** இந்தியா முழுவதும், விற்பனைக்குப்பின் சர்வீஸ்.

## எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றதொரு சரியான சைஸ் இருக்கிறது.

நேரத்தை - மிச்சப்படுத்துகிறது

எரிபொருளை - மிச்சப்படுத்துகிறது




**இலவசம்:** உங்கள் வசதிக்கேற்ப, அதிகப்படி ப்ளக் ஒன்றும், பிண்டில் ஒன்றும், சமையற்கலைப் புத்தகம் ஒன்றும் இந்த அட்டைப் பெட்டிக்குள் பேக் செய்யப்பட்டுள்ளன.

தயாரிப்பாளர்கள்:
டிடி. (ப்ரைவேட்) லிமிடெட்
பெங்களூர்-16.

# பிரும்ம கான சபா

**மயிலாப்பூர் - போன்: 72767 - சென்னை-4**

## மியூஸிக் அகாடமி ஹாலில்

**17-4-69 வியாழன் மாலை 6 மணிக்கு**

**துவக்க விழா**

| | |
|---|---|
| மாலை 6-30 மணிக்கு | செம்மங்குடி சீனிவாசய்யர் - T. N. கிருஷ்ணன் - பாலக்காடு மணி அய்யர் - விநாயகராம் |
| **24-4-69 வியாழன்** மாலை 6-45 மணிக்கு | என்னெஸ்ஸென் தியேட்டர்ஸ் அளிக்கும் மேஜர் சுந்தரராஜன் பங்கு கொள்ளும் "ஞான ஒளி" By: சுந்தரம் ("வியட்நாம் வீடு" எழுதியவர்) |
| **26-4-69 சனி** மாலை 6-30 மணிக்கு | பரதநாட்டியம் & அபிநயம் By: கமலா, ராதா & வசந்தி |
| **3-5-69 சனி** மாலை 6-30 மணிக்கு | பிரேமானந்தா பிக்சர்ஸ் (பிரைவேட்) லிட்., பத்மினி & குழுவினர் அளிக்கும் "தசாவதாரம்" (நாட்டிய நாடகம்) |
| **10-5-69 சனி** மாலை 6-30 மணிக்கு | விவேகா பைன் ஆர்ட்ஸ் கிளப் அளிக்கும் "சம்பவாமி யுகே யுகே" By: சோ |
| **17-5-69 சனி** மாலை 6-30 மணிக்கு | நேஷனல் தியேட்டர்ஸ் மனோகர் அளிக்கும் "துரோணர்" |
| **24-5-69 சனி** மாலை 6-30 மணிக்கு | சிட்டி பாபு - திருச்சி சங்கரன் - விநாயகராம் |
| **1-6-69 ஞாயிறு** மாலை 6-30 மணிக்கு | T. R. மஹாலிங்கம் - T. N. கிருஷ்ணன் - பாலக்காடு மணி அய்யர் |

---

அங்கத்தினராக சேர விரும்புவோர்கள் காரியதரிசி, 43, அலமேலு மங்காபுரம், சென்னை-4 (போன்: 72767)க்கு அணுகவும்.

# ஸ்ரீ சங்கராஞ்சலி

தமிழழகன்

வண்ண மழைமுகில் என்னக் கருணையை
வாரி இறைப்பவன் நீ! — ஒரு
தன்னந் தனியர்க்கும் தாயாய் உதவியைத்
தந்து நிறைப்பவன் நீ!

தத்துவம் யாவினும் தத்துவம் ஆகித்
தயாபரம் ஆனவன் நீ! — கறற
வித்துவக் காட்டின் வெறிப்புலி காய்ந்தும்
விளையாடும் வானவன் நீ!

சண்டாளர் ஊடும் சதாசிவம் கண்டு
சமத்துவம் போந்தவன் நீ! — எழில்
கொண்டாள்ஸ்ரீ தேவியின் கோலமே வெள்ளமாய்க்
கொஞ்சயும் தேர்ந்தவன் நீ!

சமயங்கள் ஆறும் இமயங்கள் ஆகச்
சமநெறி வைத்தவன் நீ! — இன்பம்
அமையக் கொண்டார்க்கும் அருள்நெறி தேக்கி,பு
கானந்தம் துய்த்தவன் நீ!

என்னுமுன் னோரைப் பண்ணுமெய்ப் பேறென
எல்லாம் விளைப்பவன் நீ! — மனப்
புண்ணுக்கும் மாற்றிதோ பொன்னிதழ், நோக்கெனப்
பூத்துக் குழைப்பவன் நீ!

சீரும் சிறப்புமாய்ச் செந்திரு, கல்வியைச்
சேரக் கொடுப்பவன் நீ! — இங்கு
பாரும் பரப்புமாய்ப் பஞ்சையும் உய்த்திடப்
பண்ணரி நடப்பவன் நீ!

சங்கர’னும்என இங்கர னேவந்த
சற்குரு மேனியன் நீ! — நலம்
பொங்குறும் காக்கவே பூத்தவன் தான்எனும்
புண்ணிய ஞானியன் நீ!



# தலைசிறந்த மின்விசிறியைத் தேர்ந்தெடுப்பது எப்படி?

(:.பேன் வாங்கக் கடைக்குச் செல்லும்போது இந்த விளம்பரத்தை எடுத்துச் செல்லுங்கள்)

**வடிவைக் கவனியுங்கள்:**
இணையற்ற அழகு கொண்ட மின்விசிறி ராலி:.பேன் அதிநவீன பாணியில் அழகாக வடிவமைக்கப் பட்டது. கண்ணுக்கு இதமான நான்கு வண்ணங்களில் கிடைக்கிறது—நீலம், பச்சை, பேஜ், ஐவரி. பிடித்தமான வண்ணத்தைத் தேர்ந்தெடுங்கள்.





**அமைப்பைக் கவனியுங்கள்:**
ராலி:.பேனின் பாகங்கள் சீராக இயங்கும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளன. எடுத்துச் செல்வது சுலபம். குழந்தைகளுக்கு ஆபத்து ஏற்படாமலிருக்கப் பாதுகாப்பு வலை பொருத்தப் பட்டுள்ளது. இயக்கத்தைக் கட்டுப்படுத்த புஷ்-பட்டன் வசதி உள்ளது.

**இயக்கத்தைக் கவனியுங்கள்:**
ராலி:.பேன் ஓசையின்றித் திறம்பட இயங்குகிறது. பக்கத்துக்குப் பக்கம் ...ாக ஆடிச்சுழன்று அதிகக் காற்றை அ..ளி வீசுகிறது.

**பெயரைக் கவனியுங்கள்:**
உறுதியான ராலி:.பேன முற்றிலும் நம்பகமானது. ஏனெனில் இது புகழ்பெற்ற ராலி தயாரிப்பு! இதற்கு இரண்டு வருட உத்தரவாதம் உண்டு.




--- புள்ளிக் கோட்டை ஒட்டி வெட்டவும் ---

ராலி:.பேன் பற்றிய முழு வண்ணப் பிரசுரத்தை இலவசமாகப் பெற விரும்புவோர், இந்தக் கூப்பனைப் பூர்த்தி செய்து 'ராலிஸ் இந்தியா லிமிடெட் 21, ரேவலின் ஸ்ட்ரீட், பம்பாய்-1' என்னும் முகவரிக்கு தபாலில் அனுப்பவும்.

பெயர் ..............................................

..............................................

முகவரி ..............................................

..............................................




## தென்றலின் குளுமையை ஊட்டும் ஃபேன் ராலிஃபேன்

ஸீலிங, பெடஸ்டல், வால் மற்றும் எக்ஸாஸ்ட் வகைகளில் கூட ராலிஃபேன்கள் கிடைக்கின்றன

HTA-RI-9187

# மாணவர் திறனாய்வு

சின்டெலி பெண்ணாக மாறியதாகக் கதையுண்டு. பகட்டான ஒரு மின்மினி அழகிய இளம் பெண்ணாக மாறினால் என்ன ஆகுமோ, தெரியாது. ஆனால் ஒரு பெண் மின்மினி போல் பகட்டுப் போர்வைக்குள் புகுந்தால்?.... ஏற்படக்கூடிய விளைவுகளை ஒரு புதிய கோணத்திலிருந்து பார்த்து நமக்குப் பாங்குறச் சுவையாகக் காட்டித் தருகிறார் ஆசிரியை.

அழகான அளவான சொற்களால் பாத்திரங்கள் உயிரூட்டப் பெற்று நம் முன் நடமாடுகிறார்கள். எல்லோரிலும் முதன்மையாக நம் நெஞ்சில் பதிந்து கோபுரமாய் உயர்ந்து நிற்கிறாள் சபிதா. ஆரம்பத்தில் பகட்டையும் படாடோபத்தையும் விரும்பி ஏற்கும் நாகரிக யுவதியாகவேதான் இருக்கிறாள். ஆனால்,! 'அதுவே தொழில்', 'அண்ணனுக்குத் தான் 'ரிஸப்ஷனிஸ்ட்'' என்ற நிலை வந்ததும் அவள் பெண்மை விழித்துக் கொள்கிறது; பாரதப் பண்பாடு விழித்துக் கொள்கிறது. பணத்திலும் பகட்டிலுமே வளர்ந்தவள் அந்தப் பணத்தையும் பகட்டையும் துச்சமாக, கால் தூசிக்குச் சமமாகக் கருதுகிறாள். அவள் பெண் மனம் பகட்டை விடுத்து, உண்மை அன்புக்கு, உரிமை கொண்டாடும் அன்புக்கு ஏங்குகிறது. அவள் பெண் மனம் பேசுகிறது: ''...இந்தப் போலிப் போர்வையைக் கிழித்தெறிந்து விட்டு ஓடி வரத் துடித்தேன். நான் அறிந்த எத்தனை எத்தனையோ விசித்திர மனிதர்களிடம் இதயத்தை.... நான் விரும்பிய இதயத்தைத் தேடினேன்.''

காதலை அவள் ஒரு விளையாட்டாக மதிக்கவில்லை; கேளிக்கையாகக் கருதி அதில் ஈடுபடவில்லை. மாறாக, ''பெண்களுக்கு அதுதான் வாழ்வு! அதில்தான் முழுமை அடங்கியிருக்கிறது'' என்று கருதுகிறாள். பாரதப் பண்பாட்டை மிக எளிய சொற்களில் விண்டு வைக்கும் சபிதா அந்தப் பண்பாட்டின் உயர்வுக்கு உயிருள்ள எடுத்துக் காட்டு என்பதற்கு வேறென்ன சான்று வேண்டும்?

தலைவிரி எதிர்ப்படுகிறான் அவளுக்கு. அவளுக்காக, அவள் பெண்மைக்காக அவன் மனத்துள் அழுவதைத் தெரிந்து கொண்ட சபிதா தன் வாழ்க்கைத் துணைவனை மனத்தால் தேர்வு செய்து விடுகிறாள். உறவு பூண்டு உரிமை கொண்டாடும் கணவனுக்காக ஏங்கும் பாரதப் பெண்மையின் பாங்கு வெளிப்படுகிறது அவள் சொற்களில்.

'' 'உன்னை என் உரிமை ஆக்கிக் கொள்ளப் போகிறேன். நீ எனக்குத்தான் சொந்தம். இந்தக் கோமாளி உடையும், கோபுரக் கொண்டையும் வேண்டாம். கொண்டவள் போல் என் நிழலாய் வா!' என்று கூறு வீரகனைக் காத்திருந்தேன்.''

எத்தனைதான் படித்தாலும், பணத்தில் புரண்டாலும், பகட்டான மின்மினியாய்த் திகழ்ந்தாலும் பாரதப் பெண் என்றும் பாரதப் பெண்தான் என்பதை எவ்வளவு அழகாக எடுத்துக்காட்டியிருக்கிறார் ஆசிரியை! 'மங்கை கணவனின் உடைமை' என்ற பரம்பரையான பாரதப் பண்பாட்டுக்கேற்ப இலங்கும் இலட்சிய பாரதப் பெண்ணாகக் காட்டியிருக்கிறார் சபிதாவை.

சபிதா லட்சிய பாரதப் பெண். ஆனால் அவள் பாமரப் பெண்ணல்ல. அன்பைச் சொரிந்த அண்ணனே அவள் நல்வாழ்வுக்கு



'ஆசைப்பட்டேன் நான் இலக்கியம் படித்துப் பட்டம் பெற. ஆனால் குடந்தைக் கல்லூரியில் பி.எஸ்ஸி ரசாயனம்தான் பயில முடிந்தது!' என்று கூறும் குமாரி வி. எஸ். சரோஜா 'நாம் ஒன்று நினைக்க நடப்பது வேறு ஒன்றாகி விட்டதே' என்று அலுத்துக் கொள்ள நேர்ந்தாலும் மூன்று ஆண்டு இடைவெளிக்குப் பின் அவர் நினைத்தது நடந்து விட்டது. ஆம், இப்பொழுது அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் ஆங்கில இலக்கியத்தை முக்கிய பாடமாக எடுத்துக் கொண்டு எம். ஏ பயின்று வருகிறார்.

தந்தை ஸ்ரீ விஜயராகவன் குடந்தை பாணாதுறை பள்ளியில் கணிதப் பேராசிரியர். தாயும் தந்தையும் அளிக்கும் ஊக்கமே தம்மை எழுத்துலகில் புகத் தூண்டியது என்று கூறும் சரோஜா 'கண்ணன்' பத்திரிகை நடத்திய கதைப் போட்டியில் பாராட்டுப் பரிசும், கட்டுரைப் போட்டியில் முதற் பரிசும் பெற்றிருக்கிறார்.

இத்தகைய இலக்கிய ஆர்வமே, இவரைக் 'கலை' மாணவர் திறனாய்வுப் போட்டியில் பங்கு பெறத் தூண்டியிருக்கிறது; வெற்றி பெறவும் வாய்ப்பு அளித்திருக்கிறது.

இடையூறு ஆக, தனக்குகந்தவனைத் தானே தேடும் துணிவு அவளுக்கு உண்டு. 'எல்லை மீறிய துணிவை நான் வெறுக்கிறேன். ஆனால் உரிமையுள்ள துணிவை நான் ஆதரிக்கிறேன்' என்கிறாள் அவள். 'பாலரும் நடனம் ஆடுவாள், ஆண் மகனுடன் தன்னந் தனியே செல்வாள், மேல்நாட்டு உடையணிவாள். ஆனால் — நடையின், உடையின் மாற்றம் அவள் உள்ளத்தைத் தொடவில்லை. எதிலும் ஒட்டாமல் தாமரை இலைத் தண்ணீராய், கற்பின் கனலாய், நெறிமுறை வழுவாமல் நிற்கிறாள். அவள் உள்ளம் பாரதப் பெண்ணுள்ளம். மொத்தத்தில் பாரதி கண்ட புதுமைப் பெண் சபிதா. நிமிர்ந்த நன்னடை அவளுடையது. அதே சமயத்தில் அவள் பார்வை நேர் கொண்டது; பாரதப் பண்பாட்டிலிருந்து இம்மியளவும் வழுவாதது.

ஆனால், சபிதா தவறிழைத்து விடுகிறாள்; கோழையான தலகிரியிடம் மனத்தைப் பறி கொடுக்கிறாள். விளைவு? தலகிரியின் கோழைத்தனத்தாலும் அண்ணனின் சுயநலத்தாலும் அவள் வாழ்வு இருண்டு போகிறது. சந்திரனின் நட்புக்காகப் பொய் கூறி அவளைத் துறந்து விட்டுப் போய்விடுகிறான் தலகிரி. கோழையைக் காதலித்த குற்றத்துக்காக, சிறிது காலம் மின்மினியாக இருந்த குற்றத்துக்காக வாழ்க்கை முழுதும் மின்மினியாகி, ''ஒளி இழந்து அழுது கொண்டிருந்தது'' ஒரு ஜீவன்.

சபிதாவின் பெண்மைக்காக, அவளுக்காக அழும் முதல் மனம் அவனுடையது. உயர்ந்த லட்சியத்துடன் உண்மையான முழு மனிதனைக் சபிதா முதன் முதல் சந்திக்கும் ஆண்மகன் என்ற பெருமையும் தலகிரிக்கே உரியது. அதுதான் சபிதாவை அவனிடம் ஈடுபாடு கொள்ளச் செய்கிறது. சபிதாவிடம் அவன் கொண்டது தூய காதல். அவன் போய் விடுவான்; அவளை விட்டு விலகி விடுவான். ஆனால் அவன் மனத்தை விட்டு அவள் விலக மாட்டாள். அவனால் விலக்கவும் முடியாது. அவள்மீது அவன் கொண்டது ''கண்மூடித்தனமான காதல்; ஆனால் துணிவில்லாத காதல்'' என்ற சொற்கள் உள்ளத்தை உருக்குபவை.

ஆனால் தலகிரி துணிவற்றவன். அவன் கோழைத்தனம் தன் காதலைச் சபிதாவிடம் வெளியிட முடியாமல் அவன் வாயை அடைத்து வைக்கிறது. அவன் தன்னை மறந்த ஒரு நொடியில், 'அடங்கிக் கிடந்த, இல்லை, அவன் அடக்கி வைத்திருந்த ஆவேசம் பீறிட்டுக் கிளம்பியது. தூங்கிக் கிடந்த துணிவு சிலிர்த்தெழுந்தது.' அதன் விளைவே சபிதாவின் கன்னத்தில் விழுந்த அறை. ஆனால் தன்னை மறந்த அந்தத் துணிச்சல் தன் நினைவு வந்ததுமே மறையப் பழையபடி கோழைத்தனம் தலைதூக்கி விடுகிறது.

சபிதா கூறுகிறாள்: ''உங்களிடம் துணிவு இருக்கிறது; ஆனால் அது தூங்கிக் கிடக்கிறது. அதைச் சிலிர்த்தெழச் செய்ய வேண்டும்.

# இரண்டாவது பரிசுக் கட்டுரை

கதையை முடித்ததும் சபிதாவின் நினைவு நெஞ்சையும், நீர் முத்துக்கள் விழிகளையும் நிறைத்துக் கொள்கின்றன.

தலகிரி — பாரதப் பண்பாடு அவனையும் தொடாமல் போகவில்லை. பாம்படும் அவ்வளவுதான்.'' ஆனால் கடைசிவரை அவளால் அதைச் சிலிர்த்தெழச் செய்ய முடியவில்லை. அவள் அவனைக் காதலிக்கிறாள். அவள் காதல் வெற்றி பெற்று விடுகிறது! ஆனால் 'அவன் இன்னமும் கோழைதான்!

சிறப்புச் சிறுகதை

மின்மினி



"உங்களுக்கு வழுக்கை அதிகமாகப் போச்சு....!"

துணிவற்றவன்தான்!" காதலிப்பதற்குத் துணிவு வந்தாலும் வேறொன்றுக்குத் துணிவில்லாமல் போய் விடுகிறது. சந்திரனின் நட்பைத் துறக்கும் துணிவின்றிச் சபிதாவைத் துறந்துவிடுகிறான் தலகிரி. "மின்மினியின் வெளிச்சமின்றி இருளில் ஒரு 'கோழை' தைரியமாய்த் துணிவுடன் நடந்துகொண்டிருந்தான்."

அவன் செய்தது தியாகமாக இருக்கலாம். நட்புக்குப் பெருமை செய்வதாக இருக்கலாம். ஆனால், தன்னைக் காதலித்த ஒரே குற்றத்துக்காகச் சபிதாவின் மனத்தைச் சுக்குநூறாக்கிவிட்டுப் போகும் அவன் கோழைத்தனம் நிச்சயம் மன்னிக்க முடியாதது.

அருமைத் தங்கையின்மீது அன்பைப் பொழிந்து விட்டு அதே தங்கையின் நல்வாழ்வின் கனவுகளைத் தன் சுயநலத்துக்காக மனச்சாட்சியைக் கொன்று போட்டுவிட்டு இறுக மூடி வைக்கும் சந்திரனுக்கு, சபிதா—தலகிரியின் காதலுக்குச் சமாதி கட்டும் பெருமை உரியது. "சபிதா— அவள் ஒரு மின்மினி. ஆம்; என்றும் அவள் மின்மினியாக எனக்கு — என் சுயநலத்துக்குத்தான் வழி காட்ட வேண்டும்." குணத்துக்கு ஒரு சபிதாவையும், கோழைத்தனத்துக்கு ஒரு தலகிரியையும் தீட்டினாற்போல் சுயநலத்துக்கு ஒரு சந்திரனைத் தீட்டியிருக்கிறார் ஆசிரியை.

கதையில் உரையாடல் அதிகமில்லை—ஏன் இல்லை என்றே சொல்லலாம். கோழைத்தனம் போல் அசையாத மௌனமும் தலகிரிக்கே உரித்தானது. அவன் உதிர்க்கும் ஓரிரு வார்த்தைகள் தவிர, அநேகமாகச் சபிதா பேசுவதே உரையாடல். "பழையபடி கோழைத்தனம் தலைதூக்கி விட்டதா?" "கடிதம் எழுதிவைத்துவிட்டு ஓடுகிறீர்களா?" என்பன போன்ற சபிதாவின் சொற்கள் அவளுக்கே உரித்தானவையாய், பாத்திர குண விசேஷங்களை வெளிப் படுத்துவனவாய் அமைந்துள்ளன. தலகிரி உதிர்க்கும் ஓரிரு சொற்களும் அவனுக்கே உரித்தானவை. "பிரமாதம்" — அவனது உள்ளப் போக்கைச் சபிதாவின் நடத்தை பிடிக்காமல் சுருங்கிய அவன் மனத்தை அவனது சுருங்கிய சொல் எதிரொலிக்கிறது.

பம்பாய் நகரின் ஆடம்பரமான நாகரிகச் சூழலில் ஓடுகிறது கதை. சூழலை வெகுசில சொற்களில் கண்முன் படம் பிடித்துக் காட்டும் திறன் பல இடங்களில் வெளிப்படுகிறது. "ஒருவர் சொல்வதை மற்றவர் நின்று கேட்க முடியாத அவசரம், பிறர் கருத்துக்களை ஏற்றுக் கொள்ள முடியாத தெளிவின்மை, ஆழ்ந்து சிந்திக்க அவகாசமில்லாத சூழ்நிலை — இது பெரிய பெரிய பட்டணங்களுக்கே உரிய இயல்பு" என்ற சொற்கள் தற்காலத்துப் பரபரப்புப் போக்கை, அன்றித் தெளிந்த அவசரக் கோலத்தைக் காட்டுகின்றன. பட்டண வாழ்க்கையின் நாகரிகச்சூழல் 'பால்ரூம்' நடனச் சூழ்நிலையின் வர்ணனையில் காணக் கிடக்கிறது.

பேசும் நடையில், கொச்சை மொழி இல்லாமல் உரையாடல்கள் இலக்கிய நடையில் அமைந்துள்ளன. புரியாத வார்த்தை ஜாலங்கள், பூசி மெழுகும் அலங்கார வர்ணனைகள், பல்லை உடைக்கும் வேதாந்த நீதிகள் இல்லாத யாவருக்கும் புரியும்படியான எளிய நடை ஆசிரியையின் முதல் தரமான வெற்றியாகும். நடையில் பல இடங்களில் கவிதையின் நயம் காணக் கிடக்கிறது — "அவன் முகத்துக்கு வெகு அருகே அவள் முகம் கனவுலக மென்கனவாய் நெருங்கி வந்தது" தவிர, "நதியின் சரளமான நீரோட்டம் போல் சபிதாவின் கலகலவென்ற சிரிப்பொலி கேட்டது."—உவமை "நினைவுகள் நெஞ்சின் முட்களாக உறுத்தின" —உருவகம் போன்ற அணியழகுகளுக்கும் குறைவில்லை.

சிந்தனை முத்துக்கள் பல கதையினூடே சிதறிக் கிடக்கின்றன.: "துருப்பிடித்துத் தேய்வதை விட உழைத்துத் தேய்வது மேல் அல்லவா?", "எல்லைக் கோடு எல்லாம் படத்தோடு சரி! இதயத்துக்கும் பழகும் பண்பாட்டுக்கும் கூடவா எல்லை?" மேஜையின் மீது வாடிக் கிடந்த ரோஜா மலரின் உவமை எல்லாவற்றையும் விட அழகானது.

பாரதப் பெண் யார்? நிமிர்ந்த நன்னடையும், நிமிர்ந்த ஞானச் செருக்குமிருந்தாலும் கொண்டவனுக்குச் சொந்தமானவள் பாரதப் பெண். பாரதி கண்ட புதுமைப் பெண்ணாய் நிமிர்ந்த நடையுடன் நேர்கொண்ட பார்வையும் கொண்டவள் — கற்பு நிலை வழுவாமல் கனலாய் நிற்பவள். காதலை விளையாட்டாகக் கருதுபவள் அல்ல; அதை வாழ்வாகக் கருதுபவள். சுருங்கச் சொன்னால், மின்மினியாய் இருப்பவள் பாரதப் பெண் அல்ல. "ஆண்களுக்குக் காதல் ஒரு விளையாட்டு. அதுவும் அவர்கள் வாழ்வின் ஒரு பகுதிதான். ஆனால் பெண்களுக்கு அதுதான் வாழ்வு! அதில்தான் முழுமை அடங்கி யிருக்கிறது" என்னும் சபிதாவின் பாத்திரப் படைப்பின் மூலம் இதைத் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார் ஆசிரியை.

மொத்தத்தில் — ஆண் பெண் இருவருக்கும் துணிவு எவ்வளவு அவசியம் என்று விளங்க வைத்து, நேயர்களின் நெஞ்சில் நீங்கா இடம் பிடிக்கும் சபிதாவையும் அறியாமையால் அவளைத் துறந்து தவறு இழைக்கும் தலகிரியையும் படைத்து, நம் உள்ளத்தைத் தொடும் இந்த இனிய கதையை எழுதிய ஆசிரியை பாராட்டுக்குரியவர்.




# ஐடெக்ஸ்

அழகு சாதனங்கள்!




## ஐடெக்ஸ் கண் மை

சாஸ்திரீய முறையில்
தயாரிக்கப்பட்டது.

## ஐடெக்ஸ் பிந்தி

குங்கும சாந்து பல
கவர்ச்சியான கலர்களில்
எங்கும் கிடைக்கும்.

## ஐடெக்ஸ்
## குங்கும் பேஸ்ட்டு

அரவிந்த் லாபரட்டரீஸ், P. B. 1415 சென்னை-17

G. P.

---



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414. மதராஸ்-5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

மதராஸ் சிட்பண்டு 1961 ஆக்ட்படி ஒழுங்காகவும் சிட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 of 1961)

25 மாதங்கள் — குறுகிய காலச் சிட்டுகள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200 | ரூ. 5000 | D | ரூ. 25 | ரூ. 625 |
| B | ரூ. 100 | ரூ. 2500 | E | ரூ. 20 | ரூ. 500 |
| C | ரூ. 50 | ரூ. 1250 | F | ரூ. 15 | ரூ. 375 |

40 மாதங்கள் — நீண்ட காலச் சிட்டுகள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500 | ரூ. 20000 |
| LTB | ரூ. 250 | ரூ. 10000 |
| LTC | ரூ. 125 | ரூ. 5000 |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள்: புது டில்லி — பம்பாய் — பெங்களூர் — கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

VSK - BBC - 1000 T. - K

# நாங்கள் நடிகைகள்

ஸ்ரீவேணுகோபாலன்



**நா**ங்கள் நடிகைகள். நாடகங்களில் நடிக்கிறோம். அமெச்சூர் நாடகங்களில்தான்! நகர எல்லைக்கு அப்பால் ஒதுக்குப்புறத்தில் வாழ்கிறோம். சமூகத்தின் ஒதுக்குப்புறத்திலும்கூட.

எங்களில் மூத்தவர் சாலாச்சி அக்கா. ஐம்பதை நெருங்கிக் கொண்டிருக்கிறாள். இளையவள் வசந்தகுமாரி. வயது பத்தொன்பது. இவர்கள் இருவருக்கிடையே அறுவர் இருக்கிறோம். இருபதிலிருந்து முப்பத்தைந்து வரை இந்த அறுவரின் பிராயங்கள் !



எல்லோரும் இந்த ஸ்டோரில் வசிக்கிறோம். இது ஸ்டோரா, வீடா, குச்சிலா என்று பாகுபடுத்த எங்களால் முடிவதில்லை. மங்களூர் ஓட்டுக் கூரை! மாம்பலகையில் விட்டங்கள்! தடுப்புத் தடுப்பாய்க் காரைச் சுவர்கள். ஒவ்வொரு பகுதிக்கும் இரண்டு படிகள். இதுதான் அவரவர் தனி மாளிகை!

இங்கே எப்படி வந்தோம் என்பதே எங்களுக்குத் தனித்தனியாக நினைவில்லை. திடீரென்று எங்களெங்கள் முழு வயதுகளுடன் நாங்கள் இங்கே முளைத்துவிட்ட மாதிரி தோன்றுகிறது. படிப்படியாக வளர்ந்த நினைவேயில்லை. சமூக யந்திரம் சுழலும் வேகத்தில் நாங்கள் சுழல வலுவில்லாமல் போகவே, அதன் ஓட்டத்தில் ஏற்றுக் கொள்ளப்படாமல் வெளியே தூக்கி எறியப்பட்டவர்கள் என்று நாங்கள் எங்களை எண்ணிக் கொண்டிருக்கிறோம்.

உண்மையில் எங்களுக்கு ஆளுக்கொரு சரித்திரம் இருக்கத்தான் செய்கிறது. ரிஷி மூலம், நதி மூலம் விசாரிக்கக் கூடாது என்பார்களே, அதுபோல் நாங்கள் எங்கள் மூலங்களையும் விசாரித்துக் கொள்வதில்லை. விசாரித்துத்தான் என்ன ஆகப் போகிறது? அவரவர் வாழ்வில் எங்கேயோ தேய்ந்து போயிருக்கிறோம்! கண்ணீரில் சற்று நனைந்திருக்கிறோம். அவ்வளவுதான்.

பெர்க்லி-கல்கி
இலக்கியப்
பரிசுத்திட்டம்



எல்லோரும் வாழ வேண்டும்! எல்லோரது நோக்கமும் அதுதானே! பயிர்களிலிருந்து கனிந்து கீழே உதிரும் தானியங்களையும், மரங்களிலிருந்து தாமாக உதிரும் கனிகளையும் மாத்திரமே உட்கொண்டு நாம் வாழ்கிறோமா, என்ன? இல்லையே!

ரூபாய் ஐந்நூறு இரண்டாவது பரிசு பெற்ற சமூகச் சிறுகதை



நீதி சாஸ்திரம் சொல்லி விட்டதே என்று அப்படியா வாழ்கிறோம் ? எப்படியெல்லாமோ வாழவில்லையா? அந்த 'எப்படி யெல்லாமோ' வில் இப்படியும் ஒரு வாழ்க்கை ! அவ்வளவுதானே ! போங்கள் ! நாங்களும் வாழ்கிறோம் !

அதிகாலையில் சாலாச்சி அக்கா எழுந்து விடுவாள். எல்லோருக்கும் பொதுவாகக் கொல்லையில் ஒரு கிணறு. அதில் ராட்டையின் சத்தம் சடசடவென்று ஒலிக்க தண்ணீர் இழுக்க ஆரம்பிப்பாள். அக்காவுக்கு விநாயகர் அகவல், திருப்புகழ், அருட்பா இவைகளில் நிறையப் பாட்டுக்கள் மனப்பாடம். அந்தக் காலத்தில், சிறு வயதில், பஜனை கோஷ்டியில் கலந்து கொள்வாளாம். குளித்து விட்டு, அக்கா 'கைத்தல நிறைகனி' என்று ஆரம்பிக்கும் போது, பாயில் படுத்துப் புரளும் எங்களுக்கு, உள்ளூற ஒரு தெளிவும், நம்பிக்கையும் தோன்றிக் கொண்டிருக்கும். வெயில் இன்னும் முழுதுமாகத் தோன்றாமல், இப்படி ஒரு மிதமான அந்தகாரத்தில், அக்கா இப்படியே பாடிக் கொண்டிருக்க, நாங்கள் இன்னும் உறங்கிக் கொண்டேயிருக்க மாட்டோமா என்று தோன்றும்.

அக்கா அதற்குப் பிறகு முதலில் உஷாதேவியை — இயற்பெயர் பார்வதி — எழுப்புவாள். ''உஸா! ஏ, உஸா !'' (அக்காவுக்கு 'ஷ' வாயில் நுழையாது) அப்புறம் கல்பனு, அமிர்தம், கோகிலா, சிவி, நித்தியா என்று ஒவ்வொருத்தராக எழுப்பி, கடைசியில் வசந்தகுமாரியிடம் வருவாள்.

வசந்தாவை அக்கா எழுப்பும் விதரணையே அழகாக இருக்கும். மற்றவர்களுக்குக் குரல் கொடுப்பது போல் கூச்சல் போடமாட்டாள். மெதுவாக வாசற்படி ஏறி, உள்ளே தொங்கும் சாக்குப் படுதாவை நீக்கி, ''அம்மா, வ...சந்..தா! அ..ம்மா...வச...ந்தா!'' என்று சுருதி இழுக்கும் குரலோடு அன்பு கனிய, குரல் கொடுப்பாள். அந்தக் கனிவில் அவளுக்கு ஏற்படும் குரல் வித்தியாசத்தை நினைக்கும்போது எங்களுக்குச் சிரிப்பு வரும். அவள் சுபாவத்துக்கு ஒத்து வராத கனிவு அவள் குரலில் இருப்பதாக எங்களுக்குத் தோன்றும். ''வசந்தா! மீது அக்காவுக்கு என்ன கரிசனம் பார் !'' என்று நாங்கள் எண்ணிக் கொள்வோம்.

வசந்தா எங்களில் புதியவள். சின்னவள். அதனால் அவளுக்கு இந்தத் தனி உபசாரங்கள்! எங்கள் 'குடியிருப்பு'க்கு வசந்தா வந்து ஆறு மாதங்கள் ஆகியிராது. தாயையும் மகளையும் கண்ணீரோடு ஒரு நாள் அழைத்து வந்தாள், அக்கா! வரும்போதே உலகத்தை ஒரே யடியாகத் தூற்றிக் கொண்டே வந்தாள். அது அவள் வழக்கம்! உலகம் என்றால் அவளுக்கு இந்த ஆண்கள் உலகம்தான் !

''கம்மனாட்டிங்க! கட்டின பொஞ்சாதியைக் காப்பாத்தத் தெரியல்லே ! நடுத் தெருவிலே உட்டுட்டு ஓடறானுங்க! இவங்களையெல்லாம் சுண்ணாம்புக் காளவாயிலே போட்டு நீத்தினாத்தான் ஊரிலே சேமம் பிறக்கும்.''

வசந்த குமாரியும் அவள் தாயும் எங்களோடு குடியேறினார்கள். தாய்க்கு வரும் போதே வியாதி! இருமிக் கொண்டே வந்தாள். இங்கே குடியேறிய மூன்றாவது மாதத்தில் கண்ணை மூடிவிட்டாள். வசந்தா இப்போது எங்கள் அரவணைப்பில் வாழ்ந்து வரும் இன்னொரு அநாதை !

வசந்தாவை எழுப்பிவிட்ட பிறகு அக்கா இன்னும் சத்தம் போட்டுத் தோத்திரங்கள் சொல்லிக் கொண்டிருப்பாள். அப்போது நாங்கள் பின்புறத்தில், சாம்பல் மேட்டின் மீது பல் விளக்கிக் கொண்டிருப்போம். அங்கே நிற்கும் பத்துப் பதினைந்து தென்னை மரங்களின் கீற்றுக்கள் வழியே எங்கள்மீது வரி வரியாகச் சூரிய வெளிச்சம் விழுந்திருக்கும்! கிழக்கே ஒரு பர்லாங் தூரத்தில் நெருக்கி நின்று கொண்டிருக்கும் குடிசைகளின் கூரை வழியே புகை மெள்ள எழுந்து கொண்டிருக்கும். எங்கள் தென்னந் தோப்பி



விருந்து மூன்று ஒற்றையடி வழிகள் நெளிந்து அங்கொன்றும் இங்கொன்றுமாய்ப் பிரிந்து தூரத்து மேட்டு நிலத்தில் மறைந்து போயிருக்கும் !

இரண்டு வாய் தண்ணீர் விட்டுக் கொப்புளித்து விட்டு, முகத்தில் நீர் தெளித்துக் கொண்ட பிறகுதான் எங்களுக்கு ஒரு சிலிர்ப்பும் தெம்பும் தோன்ற ஆரம்பிக்கும். எங்களது சோம்பலும், தூக்க மயக்கமும் மெள்ளக் கழன்று ஓடியிருக்கும்! புடவைகளை வரிந்து இழுத்துக் கட்டிக் கொண்டு வேலைகளைச் செய்ய ஆரம்பிப்போம் !

''வாங்க அண்ணாச்சி ! ஏது.... ரொம்ப நாளைக்கு ரொம்ப நாளா....''

அக்காவின் குரல் சற்றுப் பலமாகக் கேட்கும். குரலின் இந்த இழுப்பைக் கேட்டவுடன், வந்திருக்கும் ஆசாமியின் வகை இன்னதென்று எங்களுக்குப் புரிந்து விடும்! பெரம்பூர் நாகமணி நாடகச் செயலாளரோ, அல்லது சிந்தாதிரிப்பேட்டை முத்தமிழ்க் கலை அரங்கச் செயலாளரோ, அல்லது சூளை அங்காளம்மன் நாடக மேடைச் செயலாளரோ அங்கே வந்திருப்பார். அவரைத் தான் அக்கா வரவேற்றிருப்பாள். அக்கா இருக்கும் பகுதியின் வாசல் வராந்தாதான் எல்லோருக்கும் வரவேற்பு அறை ! கீழே தரை மீது மூன்று கோரைப் பாய்களை விரித்திருப்போம் ! சுவர்களில் இரண்டு மூன்று காலண்டர்களை மாட்டியிருப்போம். ஒரு மூலையில், மணல் மீது மண் பானையை வைத்து அதில் குளிர்ந்த ஜலம் ஊற்றி வைத்திருப்போம். இந்த வரவேற்பு அறைக்குத்தான் அக்கா வந்தவர்களை அழைத்துக் கொண்டு வருவாள்,

''ஒக்காருங்க ! சும்மா ஒக்காருங்க.... பார்த்து ரொம்ப நாளாச்சு! கடோசியா, ஒத்தை வாடையிலே 'அண்ணியின் அன்பு மடியிலே' போட்டது. அப்புறம் ஆளே தென்



படல்லே! நான்கூட கேட்டுக்கிணே இருப்பேன், 'ஏண்டா! நம்ப கண்ணும்பேட்டை தம்பி தொரை வந்தாராமா. பார்த்து நாளாச் சே'ன்னு! தொரை போட்ட நாடகத்தை மறந்துட முடியுமா! போட்டா அந்த மாதிரி நாடகம் போடணும்! வசனம் என்ன மாதிரி! கதை என்ன மாதிரி 'தம்பிதொரைக்கு இதுலே அதிஷ்டம் வந்திருக்கணுமே' ன்னு சொல்லிக்கிணே இருப்பேன்! அமிர்தம் இன் னிக்கும் தம்பி எழுதினவசனத்தைக் கியாபகம் வச்சிருக்குது! வசனம் அவ்ளோ செறப்பு!''

இதற்குள் வந்திருப்பவரது முக மீசை பெரிதாக விரிந்து ஒரு புன்னகை தோன்றி யிருக்கும்! உடம்பெல்லாம் சில்லிட்டுப் போயிருக்கும்!

''ஆமாங்க! நீங்க சொன்னதைத்தான் கவுன்சிலர் அய்யாமுத்துவும் எங்கிட்ட சொன்னாரு! நாடகத்து அன்னிக்கு தலைமை வகிச்சாரே! அந்தப் பக்கம், இந்தப் பக்கம், எழுந்து போகலே! நாடகம் முடியற வரை இருந்தாரு! இந்த மாதிரி ஒரு நாடகத்திலே யும் கடைசி வரை இருந்ததில்லேனு சொன்னாரு!''

''ஆ...ங்! பேச முடியுமா? நாடகம்னா எப்படிப்பட்ட நாடகம்? அந்த ஹீரோ நடிச் சாரே.... யாரு? அவர் பேரு சட்னு கியாபகம் வரல்லியே!''

''அவரு இப்போ நம்ப குழுலேர்ந்து விலகிட்டாரு!''

''நல்லதாப் போச்சு! அவரு வசனம் பேசறது சுத்தமா நல்லால்லே!''

இப்படி வளருகிறது. கடைசியில் இரு வரும் விஷயத்துக்கு வருகிறார்கள். வந்திருப்ப வர் முக்கால்வாசி பழைய நாடகக் குழுவை விட்டு விட்டுப் புதிய நாடகக் குழு ஆரம் பித்திருப்பார். ஒரு புதிய நாடகத்துக்குப் 'பூஜை' போட ஏற்பாடு நடத்திக் கொண் டிருப்பார். 'கிளாஸ்' நடிகர்கள் அவ ருடைய குழுவில் புதிதாகச் சேர்ந்திருப் பார்கள். பாலாமணி பார்ட்டி இசையாம்! தலைமை வகிக்க புரொட்யூசர் சங்கர் வரு கிறாராம். நாடகம் முதல் அமைச்சர் முன் னிலையில் நடக்குமாம். பெரிய பெரிய பத் திரிகை ஆசிரியர்கள் வருகிறார்களாம்..... படங்கள், விளம்பரங்கள் என்று அமர்க்களப் படுமாம்! அப்படியாம்! இப்படியாம்!

எல்லாம் எத்தனையோ பேர்கள் வாய்களி லிருந்து கேட்டுப் புளித்துப் போன விஷ யங்கள்! எல்லாவற்றையும் மீண்டும் கேட் கிறோம். அக்காவும், ''ஆங்.... ஆங்!'' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டே கேட் கிறாள். அக்காவின் நடிப்பு எங்களையெல்லாம் மிஞ்சிவிடும். பிறகு அக்கா, 'கண்டிஷன்' பேசுவாள். நாடகம் நடிக்க அறுபது ரூபாய்! ஒவ்வொரு ஒத்திகைக்கும் இரண்டு ரூபாய்!

அப்புறம் அக்காவின் குரல் திடீரெனக் கேட்கும்.

''ஏ, அமிர்தம்!''

தென்னை மர நிழலில் அரிசி களைந்து கொண்டிருக்கும் அமிர்தம் சட்டென்று எழுந்திருப்பாள். வீட்டுக்குள்ளே போய், மடிப்புக் கலையாத பாவாடையையும் தாவணி யையும் உடுத்திக் கொள்வாள். முகத்தில் பொட்டு இட்டுக் கொள்வாள். எங்களிடம் உள்ள மூன்று செட் 'கில்டு' நகைகளில் ஒரு செட்டைப் போட்டுக் கொள்வாள்.

பிறகு, ''வணக்கம் அண்ணே!'' என்று கூறிக் கொண்டே வந்திருப்பவரை நோக்கிச் செல்வாள்.

இப்படித்தான் அநேக நாட்களில் காலைப் பொழுது கழிகிறது.

மாலையில் எங்களில் அநேகருக்கு ஒத் திகை இருக்கும். ஒருத்தருக்குத் துணையாக ஒருத்தர் போக வேண்டியிருக்கும். வீட்டில் ஒருவரோ இருவரோ தவிர எல்லோரும் போய் விடுவோம். அக்கா வடபழனி கோயி லுக்குப் போய் விடுவாள்.

ஒத்திகை, கித்திகை எல்லாம் முடிந்து ஒரு வழியாய் இரவு பத்துக்கெல்லாம் வீடு திரும்புவோம். முகம் கைகால்களைக் கழுவிக் கொண்டு தென்னை மரத் தோப்பில் கூடி விடுவோம். ஓர் அரிக்கன் விளக்கைச் சுற்றி உட்கார்ந்து அக்கா சமைத்த சோற்றை ருசி பார்த்துக் கொண்டே, அன்றைக்கு நேர்ந்த அவரவர் அநுபவங்களை ஒரே ரகளை யாய்ச் சொல்லித் தீர்ப்போம்.

எங்களில் வசந்தாவுக்குக் கொஞ்சம் முகவெட்டு! நடிப்பும் நன்றாக வரும்! வசனங்களைத் துல்லியமாகவும், அழகாகவும் பேசுவாள். எனவே, அவளுக்குக் கொஞ்சம் கிராக்கி அதிகம். அவளது தகுதிகளைப் புரிந்து கொண்ட அக்கா அவளை 'உயர்ந்த ரக' நாடக மேடைகளுக்குத்தான் அனுப்பச் சம்மதிப்பாள். கீழ்த்தர மன்றங்கள் அவளை அழைக்க விரும்பினால், ''அதுக்கு ஜுட்டிங் (ஷூட்டிங்) ரொம்ப இருக்குங்க!'' என்று மெள்ளச் சாக்குப் போக்குச் சொல்லி எங்களில் யாரையாவது 'புக்' செய்வாள்.

வசந்தாவைக் கலா பவனத்தார் 'புக்' பண்ணியிருந்தார்கள். இவர்கள் பட்டணத்தி லேயே புகழ் பெற்ற நாடகக் குழுவினர். பலதரப்பட்ட கம்பெனி உத்தியோகஸ்தர் களும் இதரர்களும் இதில் பங்கு கொண் டிருந்தார்கள். ரொம்பவும் கண்ணியமான குழு! இவர்கள் நடத்தும் ஒரு 'செட்' நாட கங்கள் பிரசித்தி பெற்றவை!

கலாபவனத்தில் வசந்தா நடித்த முதல் நாடகம் ஒரு தூக்குத் தூக்கியது. எங்களுக் கெல்லாம் ஒரே மகிழ்ச்சி! அக்காகூட ஓயாது வசந்தாவின் புகழையே வருவோர் போவோரிடம் பாடிக் கொண்டிருந்தாள்.

கலா பவனத்தில் அடுத்த நாடகத்துக்கு உண்டான ஒத்திகைகள் நடந்து கொண் டிருந்தன. வசந்தா அதில் நடிக்க ஏற்பாடாகி யிருந்தாள். கடந்த மூன்று மாதங்களாக ஒத்திகைகள் அபிராமபுரம் பள்ளிக்கூடம் ஒன்றில் நடந்து வந்தன.

இந்த ஒத்திகைகளுக்கு வசந்தா தனி யாகவே போய் வருவாள். அவர்கள் கார் அனுப்பி வசந்தாவை அழைத்துப் போவார்கள். பிறகு காரிலேயே திருப்பிக் கொண்டு வந்து விடுவார்கள். 'தங்கமான வர்கள்' என்று அவர்களை எடை போட்டு வைத்திருந்த அக்கா அவர்கள் ஒரு விஷயத் தில் மாத்திரம் இப்படித் தனியாகப் போய் வரும் சலுகை அளித்திருந்தாள்.

நாங்கள்கூட ஒத்திகை இல்லாத நாட் களில் என்றாவது ஒரு நாள் துணையாகப்

போய் வருவோம். எப்படியோ ஒத்திகை என்றும் எங்களுக்கு ஒரே ஆசை! கனகச்சிதமாகவும் நேரப்பிரகாரமும் நடக்கும். உள்ளே கட்டுப்பாடான அமைதி சூழ்ந்திருக்கும். ஒத்திகை நடந்த பிறகு இரவுச் சாப்பாடு பிரமாதமாக நடக்கும். எல்லாம் ஒரு மேளாவே இருக்கும்!

ஒத்திகைகளில் வசந்தாவின் நடிப்பைப் பார்க்கப் பார்க்க எங்களுக்கே ஆச்சரியமாக இருந்தது. நறுக்குத் தெறித்தாற்போல் பேசினாள். காதல் காட்சிகளில் உருக்கத்தோடும், நளினத்தோடும் நடித்தாள். வசந்தாவின் உடம்பு அவள் நிற அழகே எங்கள் கண்களைப் பறித்தது. அவள் ஒரு நடை போட்டால்கூட அது நாட்டியமாகத் தோன்றியது. ஒரு விழி அசைந்தால்கூட அது அபிநயமாகத் தோன்றியது. டைரக்டர் சாருக்கு ரொம்பத் திருப்தி. அடிக்கொரு தரம் புகை வில்லையைத் துப்பிவிட்டு வந்து, ''வசந்தா! பிரமாதம் போ!'' என்பார்.

இந்த நாடகத்தில் நாங்கள் எல்லோருமே பெரிய நம்பிக்கை வைத்திருந்தோம். இதிலேயும் வசந்தா ஒரு நல்ல பெயர் வாங்க வேண்டும் என்று பிரார்த்தித்தோம். உண்மையில் அவள் மூலமாவது எங்களுக்கு ஒரு விடிவுவராதா என்று எண்ணியிருந்தோம்.

நாடகம் அரங்கேற்ற விழாவுக்கு நான்கு நாட்கள் பாக்கி! ஹீரோவாக நடித்த ராமகிருஷ்ணனுக்கு சீமாரின் அழைப்பு வந்து, அவர் பறந்து போகவேண்டி வந்தது. எல்லோருக்கும் 'திக்'கென்று ஆகிவிட்டது. நாடகத்தில் ப்ராம்ப்டராக இருந்து உதவி செய்த ரமேஷ் என்ற இளைஞரை ஹீரோவாகப் போட்டார்கள். அவர் ஒருவருக்குத்தான் வசனம் கொஞ்சம் நெட்டுருவாகியிருந்தது.

அரங்கேற்ற நாள்! எங்களுக்குக் கதும் கதும் என்றிருந்தது. டைரக்டர் சாருக்கு முகத்தில் சிரிப்பில்லே. எல்லோரும் ஒரு மாதிரியாகவே இருந்தார்கள். வசந்தா மேடையைத் தொட்டு நமஸ்காரம் பண்ணினாள். நாங்கள் மூன்றாவது வரிசையில் உட்கார்ந்திருந்தோம்.

**நா**டகம் ஆரம்பித்தது. ரமேஷ் மேடையில் வந்தார். எங்களுக்குப் பனிச்சென்று தோன்றினாற்போல் இருந்தது. நாங்களே மெய்ம்மறந்து போனோம்! என்ன அழகாகப் பேசினார். என்ன அழகாக நடித்தார்? வசந்தாவும் அவரும் வசனம் இல்லாமல் ஒரு காட்சி முழுதும் ஒருவரை ஒருவர் மென்ன மென்னப் பார்த்துக் கொள்வதாக இருந்தது. அதில் இருவரும் அப்ளாஸ் வாங்கினார்களே, பார்க்கலாம்!

நாடகம் முடிந்ததும் நாங்கள் வசந்தாவைக் கட்டிக் கொண்டோம். சாவாச்சி



''கருமி! கருமி! இந்த மாதிரி கருமியை உலகத்திலேயே பார்க்க முடியாது' என்று கமலா உன்னைத் திட்டிக் கொண்டே போனாளே! அவள் எதைக் கேட்டு நீ இல்லை என்று சொல்லிட்டே?''

''ஒரு டஜன் நைலான்!''

சுக்காலுக்குக் கல்ஸீர் வந்து விட்டது. டைரக்டர் சாரும், செக்ரடரியும் பரவசத்தில் மூழ்கிப் போனார்கள்:

பட்டணமெல்லாம் நாடகத்தைப் பற்றிப் பேச்சு! ''கண்கள் நடித்தன!'' என்று பத்திரிகையெல்லாம் பாராட்டு! சபாக்களில் சான்ஸுக்கு மேல் சான்ஸ்!

எங்கள் கண்களில் வசந்தா ஒரு விடிவின் முதல் வெளிச்சமாய்த் தோன்றினாள். மனசில் ஒவ்வொருவருக்கும் நம்பிக்கை பூத்து மலர்ந்தது.

இடையில் ஒரு வாரம் நாடகக் குழு கோயமுத்தூருக்குப் போக வந்தது. அங்கே ஆறு நாடகங்கள் தொடர்ந்தாற்போல் நடந்தன. ஊருக்குப் போய் வந்த வசந்தா எங்களுக்கு உயர்ந்த ரகசோளித் துணிகள் கொண்டு வந்திருந்தாள். எல்லாம் கலா பவனத்தார் அளித்தவை என்று பெருமையோடு கூறினாள். அவள் திரும்பி வந்த இரவு எல்லோரும் பின் புறத்தில் கூடியிருந்தோம். அக்கா கிருத்திகை என்று வடபழனி கோவிலுக்குப் போயிருந்தாள். வசந்தா கோயமுத்தூர் சமாசாரங்களைச் சொல்லிக் கொண்டிருந்தாள். எல்லோரையும் பார்த்து அவள், ''நான் ஒரு விஷயம் சொல்றேன்! அக்காகிட்டே சொல்லாமல் இருப்பீங்களா?'' என்றாள். எல்லோரும் ''என்ன? என்ன?'' என்று கேட்டோம்.

''இந்தச் சோளித் துணியெல்லாம் கலா பவனம் வாங்கித் தரவில்லே. சும்மா அக்காவுக்கோசரம் அதுமாதிரி சொன்னேன்'' என்றாள்.

''நீயே பணம் போட்டு வாங்கினையா?'' என்றாள் அமிர்தம்.

''அதுவுமில்லே. ரமேஷ்தான் வாங்கிக் கொடுத்தார். நாடகத்திலே பிறந்த நாள் பரிசளிப்பு கொடுப்பதாக ஒரு கட்டம் வருதில்லே. வெறும் அட்டைப் பெட்டியைக் கொடுக்காம, உள்ளே இந்தமாதிரி துணி வைக்கக் கொடுத்தார். தினம் ஒண்ணு கொடுத்தார். கேட்டுப் பார்த்தேன். 'நீயே வைச்சுக்கோ, வசந்தா'ன்னு சொன்னார். என்னாலே மறுக்க முடியல்லே!''

நாங்கள் மௌனமானோம். எங்கள் மனங்களில் ரமேஷின் உருவம் — சிரித்த முகத்தோடும் துருதுருப்பான கண்களோடும் தெரிந்தன. அவர் கார் ஓட்டி வரும் லாகவமும், சரளமாய் ஆங்கிலம் பேசுகிற அழகும் நினைவுக்கு வந்தன. அப்பா பெரிய இஞ்சினியர். பையனும் இஞ்சினீரிங் படித்து முடித்திருந்தான்! பணக்காரர்கள். வீடு, தோட்டம் கார் எல்லாம் உண்டு.

''அதிஷ்டந்தாண்டி!'' என்று ஒரே வார்த்தையில் அமுக்கிச் சொன்னாள், அமிர்தம், எங்கள் எல்லோர் சார்பிலும்.

**(அடுத்த இதழில் முடியும்)**



## மகாராஷ்டிரப் பழக்கம் !

மகாராஷ்டிரர்கள் ரசிகர்கள். ஜோக் அடித்தால் ரசிப்பார்கள். தாங்கள் கூறும் ஹாஸ்யத்தையும் மற்றவர் ரசிக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். சிரிக்கிறதோடு நிற்பதில்லை. கையை நீட்டச் சொல்லி, கையில் தட்டுவார்கள். தங்கள் கையை நீட்டித் தட்டச் சொல்லுவார்கள். மகாராஷ்டிரர்கள் ஜோக் அடிக்கிற விதம் இது ! - மயிலன்

---

## என்ன விசித்திரம் ?




பம்பாயில் குழந்தைகள் விளையாட்டு மைதானம் ஒன்று திறக்கப்பட்டது. ஆனால் அந்த விழாவுக்கு வந்த குழந்தைகள் உள்ளே அனுமதிக்கப்படவில்லையாம்.

'ஹிம்மத்' - 'நாயக்'

---




ராமன் கிருஷ்ணனிடம் ஒரு கடியாரத்தைப் பழுது பார்த்துத் தரும்படி கொடுக்கிறான். கிருஷ்ணனுடைய மேஜையிலிருந்து அவனுக்குத் தெரியாமல் ஒரு நாள் ராமன் அந்தக் கடியாரத்தைத் தன்னுடைய கடியாரம் தானே என்று எண்ணி எடுத்துக் கொண்டு செல்கிறான். அந்தக் கடியாரம் ராமனுடையதாக இருந்தால் கூட அதைக் கிருஷ்ணனுடைய பொறுப்பிலிருந்து அவனுக்குத் தெரியாமல் எடுத்துச் செல்வது திருட்டுக் குற்றமாகும் !

○ ○ ○

பத்திரத்தின் பேரில் கொடுத்த கடனைத் திருப்பித் தருவதற்கு மூன்று ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டால் கடன் கொடுத்தவர் கடன் வாங்கியவர் பேரில் நீதிமன்றத்தில் வழக்குப் போட முடியாது! ஆனால் கடன் கொடுத்தவருக்குக் கடனைத் திரும்பப் பெற உரிமை இருக்கிறது!

○ ○ ○

ஒரு பெண்ணுக்கு நாளை பதினாறு வயது நிரம்பிப் பதினேழாவது வயது தொடங்குகிறது. இன்று அவளைப் பராமரிப்பவரிடமிருந்து கடத்திச் சென்றால் சட்டப்படி அது குற்றமாகும். ஆனால் நாளை கடத்திச் சென்றால் குற்றமாகாது !

○ ○ ○

குற்றச் சட்டப்படி ஏழு வயதுவரை குழந்தைகள் ஒரு குற்றமும் செய்வதில்லை. ஏழு வயது முடிந்தபிறகு அவர்கள் செய்யும்குற்றத்துக்குத்தண்டனைகிடைக்கும்.

தொகுப்பு: எம். என். சுந்தரராகவன்

---



ரஸ்தாவே உங்களுக்குச் சொந்தம் என்பதுபோல் ஓட்டாதீர்கள். கார் உங்களுக்குச் சொந்தம் என்று பாவித்து ஓட்டுங்கள்.

ஆதாரம்: 'ஹைவே நியூஸ்' தகவல்: ரமணன்

---

பையனின் அப்பா (தோட்டத்தில் மேய்ந்து கொண்டிருக்கும் மாட்டையும் கன்றையும் காட்டிப் பையனிடம்): டேய்! அது யார் வீட்டு மாடு? நம் தோட்டத்தில் புகுந்து செடிகளை நாசம் செய்கிறதே !



பையன்: மாடு யாருதுன்னு தெரியாது ! கன்றுக்குட்டி யாருதுன்னுதான் தெரியும் !

அப்பா (ஆவலுடன்): கன்றுக்குட்டி யாருடையது ?

பையன்: அந்த மாட்டினுடையது !

- கே. வி. தங்கமணி

# மேச்சு

முகுந்தன்



கதம்பப் பொட்டலம் ஒரு கையிலும், ஹோட்டல் இனிப்பும், கறுப்புத் திராட்சையும் அடங்கிய பழுப்பு நிறக் காகிதப் பொட்டலம் இன்னொரு கையிலுமாக, மனசு நிறையச் சுவையான கற்பனைகளைத் தேக்கிக் கொண்டு வீட்டுக்கு வந்து பார்த்தால், வாசல் கதவில் பூட்டு தொங்கியது. எனக்கு வெகு ஏமாற்றமாகப் போய்விட்டது. 'இந்தப் பூட்டின் முகத்தில் விழிக்கவா ஆபீசில் அரைமணி நேரம் பெர்மிஷன் கேட்டுக் கொண்டு விழுந்தடித்துக் கொண்டு வந்தேன்?...'

ஏமாற்றத்தை மீறிக் கொண்டு இந்துவின் மீது கோபம் கோபமாக வந்தது. அப்படி எங்கேதான் போய் விட்டாள் இவள்? அதுவும் இன்றைக்கு எப்படிப்பட்ட நாள் என்று அறிந்த பிறகுமா?

போன வருடம் இதே பிப்ரவரி பதினைந்தாம் தேதிதான் நான் இந்துவைப் 'பெண் பார்க்க'ப் போனேன். என் உறுதி என்கிற கற்கோட்டையைத் தகர்த்தெறிந்து, அன்பென்கிற பொன் சிங்காதனத்தை நிர்மாணித்து, தாம்பத்தியம் என்கிற நல்லரசை நிறுவ இந்துவின் கடைக்கண் பார்வையும், இதழ்க் கடைச் சிரிப்பும் சேர்ந்து சதி செய்த நாள் இது. எப்படி யெப்படியெல்லாம் இதைக் கொண்டாட வேண்டும் என்று திட்டமிட்டிருந்தேன்?.... ஹூம்!....

''மாமா(வ்)!.... சார்!....மாமா(வ்)!'' என்று கூப்பிட்டுக் கொண்டே என் எதிரில் வந்து நின்றான் ஒரு சின்னப் பயல். அடுத்த வீட்டு ரங்கநாத ராவின் நான்காவது 'தயாரிப்பு' இது.

''என்னடா அம்பி?''

''உங்க வீட்டு மாமி சினிமாவுக்குப் போயிருக்கா.... நீ வந்தால் இதைக் கொடுக்கச் சொன்னா!'' என்றபடி புழுதி படிந்த நிஜார்ப் பையிலிருந்து எங்கள் வீட்டுச் சாவியை எடுத்துக் கொடுத்தான் பையன்.

இந்துவும் நானும் இன்று அந்த 'இரவு சிரிஸ்' படத்தின் இரவுக் காட்சிக்குப் போவதாக அல்லவா திட்டம்? கெடுத்தாளே பாவி!... ஒரு படம் பார்த்தாலே ஒற்றைத் தலைவலி வந்துவிடும் அவளுக்கு. இரண்டு படங்கள் பார்ப்பதென்றால் தாங்குமா அந்தப் பூஞ்சை உடம்பு?...

''என்ன படம்டா தம்பி?''

''நேக்குத் தெரியாது மாமா. எங்கம்மா என்கிட்டே சொல்லல்லே.''

''! அப்படீன்னா உங்கம்மாவும் போயிருக்காளா?''

''ஆமாம்.... நான் வரட்டுமா மாமா?..... நரசிம்மன் பம்பரத்தோட காத்திண்டிருக்கான்!....''

பயல்போய்விட்டான்.

இந்து வந்தவுடன் ஒரு மூச்சு சண்டை பிடிக்க வேண்டும் என்ற தீர்மானத்துடன் பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே போனேன்.

ரேடியோவில் 'போனவன் போனாண்டி!' (வெள்ளிக்கிழமை சாயந்திரம் அல்லவா!) என்று இசைத்தட்டு முழங்கிக் கொண்டிருக்கும்போது முகமெல்லாம் சிரிப்பாக, உடம்பெல்லாம் அழகாக எதிரே வந்து நின்றாள் இந்து. நான் அவளைப் பார்க்காததுபோல் கையிலிருந்த புத்தகத்தில் ஆழ்ந்து போனதாகப் 'பாவ்லா'க்காட்டினேன். அடுத்த கணம் என் கையிலிருந்த புத்தகம் பறிக்கப்பட்டது.

''ஏய்! என்ன இது விளையாட்டு? ஒரு மனிதன் படித்துக் கொண்டிருப்பதுதெரியவில்லே?''

''அந்தப் புத்தகம் எங்கேயும் போய் விடாது. நான் ஒருத்தி எதிரே வந்து நிற்கிறேனே, அதைக் கவனியுங்கள் முதலில். எப்போது வந்தீர்கள் ஆபீசிலிருந்து? உங்களுக்காகப் பிளாஸ்கிலே காப்பி போட்டு வைத்திருந்தேனே, சாப்பிட்டீர்களா?...சம்புடத்தில் 'ஸ்வீட்' வைத்திருந்தேனே, 'டேஸ்ட்' பார்த்தீர்களா?''

''நிறுத்து உன் உபசாரத்தை! நன்றாக இருக்கிறது நீ உன் புருஷனை விசாரிக்கிற லட்சணம்... எத்தனையோ ஆசையாக ஆபீஸிலிருந்து ஓடி வந்தால், மகாராணி சினிமாவுக்குப் போயிருக்கிறாய்!.... ஹூம்! நான் ஒரு மடையன்!''

''உஸ்!... கோபம், பாபம், சண்டாளம் என்பார்கள். கோபித்துக் கொள்ளாதீர்கள்!''

''நீ பண்ணியிருக்கிற காரியத்துக்குக் கோபிக்காமல் பாராட்டச் சொல்கிறாயாக்கும்!.... நான்சென்ஸ்!...'' என்று சீறி விழுந்தேன்.

''அடாடாடா! என்னமாய்க் கோபம் வருகிறது உங்களுக்குத்தான்... நீங்கள் அத்தனை ஆசையோடு வரப் போகிறீர்கள் என்று தெரிந்திருந்தும் சினிமாவுக்குப் போனது தப்புத்தான். நான் வரவில்லை என்றுதான் சொன்னேன். அடுத்த வீட்டு ராயர் மாமிதான் வற்புறுத்தி அழைத்துக் கொண்டு போய் விட்டாள்.''

''ஏன், இன்றைக்குச் சினிமா பார்க்காவிட்டால் அந்த அம்மாளுக்குக் குடி முழுகிப் போய் விடுமோ?...''

'' அப்படித்தான் என்று வைத்துக்கொள்ளுங்களேன். இன்றைக்கு என்ன கிழமை?''

''அதற்கும் நீ சினிமாவுக்குப் போனதற்கும் என்ன சம்பந்தம்?...''

''பொறுங்கள்; இன்றைக்கு வெள்ளிக் கிழமையல்லவா? நாளன்றைக்கு ஞாயிற்றுக் கிழமை ஆயிற்றே! அதனால்தான் போனேன்.''

''உன் பேச்சுக்குப் பதவுரை, பொழிப்புரை எல்லாம் சொல்ல நான் எங்காவது ஆளைத் தேடிக் கொண்டு போக வேண்டியதுதான். விஷயத்தைப் போட்டு உடைப்பாயா, என்னவோ புதிர் போடுகிறாயே?...''

இந்து விளக்கினாள். அவள் சொன்னபிறகு அவள் மீதோ ராயர் சம்சாரமான அநுசூயா மீதோ எள்ளத்தனை தப்பும் இல்லையென்று மனத்துக்குச் சமாதானமாகியது. எல்லாவற்றுக்கும் மூலகாரணம் அந்த மனிதர் ரங்கநாதராவ்தான்.

அவருக்கு வயது ஐம்பதுக்கு மேலிருக்கும். சந்தன நிறம்; ரவை புரளும் சாரீரம்; அட்டகாசமான பேச்சு; அத்தனையும் அவருக்கு உண்டு.

நானும் பார்த்திருக்கிறேன்; கதைகளில் வரும் ராவுஜிகளும் சரி; எனக்குத் தெரிந்த ஓரிரண்டு பேரும் சரி, நல்ல புத்திமான்களாகவே இருந்தார்கள். ஆனால் ரங்கநாத ராவ் அதற்கெல்லாம் நேர் மாறானவர். அவர் கைப்பட அவர் வீட்டிலேயே மாட்டி இருக்கிற சுவாமி படத்துக்குக் காலணா கற்பூரம் வாங்கிக் காட்டியிருப்பாரா என்பது சந்தேகம்தான். அவர் ஒரு லோகாயதவாதி. கடவுள் கொள்கையைப் பற்றி அவர் தமது கருத்தென்று எதையும் தெரிவித்ததில்லை. என்றாலும் அவருடைய செய்கைகள் மூலம் சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தார். மற்றதெல்லாம் கிடக்கட்டும்; வருஷத்துக்கு இரண்டு மூன்று தடவை கந்த சஷ்டி என்றும் இன்னொன்று என்றும் அந்தப் பேட்டை முருகன் வீதி வலம் வரும்போதுகூட மனிதர் வாசலுக்கு வந்து தரிசிக்க மாட்டார். வீட்டின் பின்கட்டில் எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பார் தலையில் ஆனந்தமாகத் தாளம் போட்டபடி. அல்லது கீரைப் பாத்திக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருப்பார். அதுவும் இல்லா விட்டால் ஏதாவது ஆங்கிலத் துப்பறியும் நாவலைப் பாராயணம் பண்ணிக் கொண்டிருப்பார்.

ராவுஜிக்கு உத்தியோகம் என்று ஏதுவும் கிடையாது. வைரம் பரீட்சை பார்த்து, வாங்கிக் கொடுப்பதாகச் சொல்லிக் கொள்வார். வீடு பிடித்துக் கொடுப்பதும் உண்டு. இது தவிர, சினிமாக்காரர்களுக்குக் கும்பல் காட்சிகளுக்கு ஆள் சேகரித்துக் கொடுப்பது.



காஷ்மீரிலிருந்து அசல் லொஜித்தும் தங்க பஸ்பமும் தருவித்துக் கொடுப்பது, பிளாஸ்டிக் பைகளுக்கு ஆர்டர் பிடிப்பது, பவானி ஜமுக்காள விற்பனை டெண்டர்கள் திறக்கப்படும்போது வெளியூர்க் கம்பெனிகள் சார்பில் போய்ப் பார்த்துக் கொண்டு வருவது—இவையும் அவரது வேலைகளில் அடக்கம். மனிதருக்கு வருமானம் என்னவோ நன்றாகத்தான் வந்து கொண்டிருந்தது. அவர் சம்பாதித்ததில் — அதாவது சம்பாதித்ததாகச் சொல்லிக் கொண்டதில் — ஒரு குடும்பம் கௌரவமாகக் கண்ணைக் கசக்காமல், கையேந்தாமல், இரவலுக்குக் கரண்டியைத் தூக்கிக் கொண்டு ஓடாமல் குடும்பம் நடத்தலாம்தான். ஆனால் ராவுஜி குடும்பம் அப்படி நடக்கவில்லை.

மூத்த பெண் சாவித்திரி தன் பொங்கும் இளமையைக் கண்ணராவியான தாவணியில் மறைத்துக் கொள்ள அரும் பாடு பட்டுக் கொண்டிருக்க, அவரது இரண்டாவது பிள்ளை பள்ளிக்கூட 'ஸ்பெஷல் பீஸ்' கட்ட வழியின்றி வீட்டோடு ஒதுங்க, மூன்றாவது பெண் டில்லி (செல்லப் பெயர்)யும், கடைக் குட்டி ராகவேந்திரனும் சாயந்தர வேளைகளில் கடற்கரைப் பக்கம் தகர டின்னைச் சுமந்து கொண்டு 'கைமுறுக்கு!' என்று கூவ வேண்டிய நிலையிலேயே குடும்பத்தை வைத்திருந்தார் ராவுஜி.

காரணம்? வெகு சாதாரணம்.

யார் யாரோ எப்படி எப்படியோ சம்பாதித்ததையெல்லாம் வெள்ளைப் பணமாக்கவும், பாழ் பண்ணவுமென்றே நடக்கிற குதிரைப் பந்தயம்தான் ராவுஜியின் குடும்பத்தைச் சீரழித்துக் கொண்டிருந்தது. ஒரு 'மீட்டிங்' தவறமாட்டார் மனிதன். அதிலும் நாசமாப் போகாத 'ஜாக்பாட்' ஆரம்பித்ததிலிருந்து பித்தம் அதிகமாகி விட்டது. 'எப்படியாவது மூணு நாலு லட்சம் தட்டிடணுமய்யா!' என்று கண்களில் ஆசை வெறி மின்ன அவர் என்னிடம் சொல்லும்போது அவருடைய அந்த ஆசை நிறைவேறாதா என்று அவரை விட நான்தான் அதிகமாகப் பிரார்த்தனை பண்ணுவேன்.

ராவுஜியை ரேசுக்குப் போக விடாமல் தடுப்பதற்கு அநசூயா படாத பாடு பட்டாள். அந்த நேரத்தில் அந்த அம்மாள் நாய் வாலை நிமிர்த்தப் பாடுபட்டிருந்தால் அதுவாவது பயனளித்திருக்குமோ என்னவோ? ராவுஜியின் இரத்தத்தில், உணர்வில், மூச்சில், பேச்சில், குதிரைகளின் 'பெடிக்ரி'யும், பழைய ஓட்டங்களும் 'டிரெய்னர்'களின் சூரத்தனங்களும், 'ஜாக்கி'களின் 'டிப்ஸ்'களும் நீக்கமறக் கலந்து நிறைந்திருந்த காரணத்தால் அநசூயாவின் முயற்சிகள் பலனளிக்காமலே போயின.

அழுதாள்; தடுத்தாள்; அடம் பிடித்தாள். இவற்றுக்கெல்லாம் கூலியாக அவர் கையால் அறையும் வாங்கிக் கொண்டாள். அத்துடன் விவகாரம் நின்றதே தவிர, அவர் கிண்டிக்குப் போவது நிற்கவில்லை.

ரேஸ் 'சீஸன்'போது ஒவ்வொரு சனிக்கிழமை இரவும் ஒன்பதரை மணிக்கு மேல் அடுத்த வீட்டில் ராவுஜிக்கும் அந்த அம்மாளுக்கும் வாக்குவாதம் தொடங்கும். அது பத்தரை, பதினொன்று வரை நீடித்துக் கொண்டே போகும். ராவுஜி அலமாரியில் இருக்கிற கடுகு, மிளகு டப்பாவையெல்லாம் எடுத்துக் கவிழ்த்துப் பார்ப்பார் — மனைவி தமக்குத் தெரியாமல் ரூபாய் எதையாவது ஒளித்து வைத்திருக்கிறாளோ என்று. அதிக பட்சம் ஐந்து ரூபாயாவது தேறும். அதைச் சுருட்டிக் கொண்டு போய் விடுவார். இது தப்பு, அநியாயம் என்று அநசூயா ஓலமிடுவாள்; சண்டை பிடிப்பாள். ஆனால் அவராவது, அதை லட்சியம் பண்ணுவதாவது!

இப்படி, இருக்கிற சில்லறைக் காசையும் அவர் சுரண்டிக் கொண்டு போகாமல் இருக்க அநசூயா ஒரு வழி கண்டுபிடித்தாள். பணம் இருந்தால்தானே அவரிடம் 'தாரை வார்க்க' நேரிடுகிறது?.... பணம் இல்லாமல் பண்ணிவிட்டால்?

இந்த யோசனையின் பிரதிபலிப்புதான் அநசூயாவின் சினிமா விஜயம். அந்த அம்மாளுக்கு ஏற்கனவே கொஞ்சம் சினிமாப் பைத்தியம் உண்டு. எனவே, ஞாயிற்றுக்கிழமை ரேஸ் என்றால் வெள்ளிக்கிழமையன்று பெண்ணையோ பிள்ளையையோ அழைத்துக் கொண்டோ, அல்லது அக்கம்பக்கத்தில் துணை சேர்த்துக் கொண்டோ போய்ப் படம் பார்த்துவிட்டு, காசைச் செலவழித்துவிட்டு வந்து விடுவாள். அதன்படிதான் இன்று இந்துவும் அவளுடன் போய் வந்திருக்கிறாள்.

இது விஷயம் தெரிய வந்ததும் எனக்கு இந்துவின் மீதிருந்த கோபம்கூடத் தணிந்து போய் விட்டது. 'சரி, ஏதோ ஒரு நல்ல காரியத்துக்குத்தான் உதவியிருக்கிறாள்' என்றெண்ணிச் சமாதானப்படுத்திக் கொண்டேன்.

அன்றிரவு பக்கத்து வீட்டில் ஏக அமர்க்களம். மனைவி மறுபடியும் 'சதி' பண்ணிவிட்டாள் என்று ராவுஜிக்கு ஆத்திரம். 'காரே மூரே' என்று அவர்கள் பாஷையில் திட்டினார். அநசூயாவும் சளைக்கவில்லை; மூச்சுப் பிடித்துக் கொண்டு பதில் பேசினாள். பக்கத்து வீட்டில் இருந்து அவர்கள் பேசுவதைப் புரிந்து கொள்கிற அளவுக்கு எனக்குக் கன்னட 'ஞானம்' வளர்ந்திருந்தது. எனவே, அவர்கள் பேச்சைக் கேட்டேன்.

''நீங்கள் இனி மேல் ரேஸ் பக்கம் தலை வைத்துக்கூடப் படுக்கக்கூடாது...'' என்றாள் ராவுஜியின் மனைவி.

''நீ யார் எனக்குப் புத்தி சொல்வதற்கு?....'' என்று உறுமினார் ராவுஜி.

''சரி, போங்கள். நானும் குழந்தைகளும் எங்கேயாவது பாழுங் கிணற்றிலே விழுந்து தொலைக்கிறோம்!....''

''ஹாம்! என்னை மிரட்டறியா? தைரியம் இருந்தால் அப்படித்தான் செய்யேன்!....''

''நாங்கள் கிணற்றிலே விழுகிறோம்; நீங்கள் ரேஸ் கோர்ஸிலேயே மண்டையைப் போட்டு விடுங்கள்!'' என்று வீறிட்டாள் அநசூயா, ஆங்காரத்துடன்.

**'ஜீவ பிட்டுவீரி!'** என்ற அவளது கடைசி வார்த்தையைத் தொடர்ந்து 'பளார்! பளார்!' சத்தம் கேட்கத் தொடங்கியவுடன், ராவுஜி தமது கடைசியும் எதிராளியால் பிரயோகிக்க முடியாததுமான அஸ்திரத்தைப் பயன்படுத்தத் தொடங்கிவிட்டார் என்று உணர்ந்து கொண்டேன். மறுநாள் காலையில் ராவுஜி ஓசிப் பேப்பர் கேட்க வரும்

போது அவர் செய்வது மிகவும் தப்பான காரியம் என்று எடுத்துச் சொல்ல வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டு படுக்கப் போனேன்.



ஆனால் மறுநாள் ராவுஜி பேப்பர் கேட்க வரவில்லை. அவருடைய பையனை அழைத்து விசாரித்தேன். ஒரு பிரபல தயாரிப்பாளரின் படத்துக்கு வெளிப்புறப் படப் பிடிப்பாம். அதற்கு ஆள் சேகரித்துக் கொடுக்க, அதிகாலையிலேயே வந்து அழைத்துக் கொண்டு போய் விட்டார்களாம்.

''எங்கேடா ஷூட்டிங் ?''

''செங்கல்பட்டிலேயாம் !....''

'ஊட்டி, கொடைக்கானல் என்று எங்கேயாவது தொலைவிலே இருந்து தொலைக்கக் கூடாதா ?.... ஆசாமி ஞாயிற்றுக்கிழமையன்று வெளியூரிலே இருக்கும்படி நேருமே!' என்று எண்ணிக் கொண்டேன்.

ஞாயிற்றுக்கிழமையன்று நான் கண் விழிக்கும்போதே இந்து புறக்கடையில் போய் உட்கார்ந்து விட்டிருந்தான். என் தலைவிதியை நொந்து கொண்டே சமையலறையில் போய்ப் பாத்திரங்களைத் தட்டிக் கொட்ட முனைந்த போது ஒரு யோசனை தோன்றியது : 'பேசாமல் ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு ஓர் எடுப்புச் சாப்பாடும் கொண்டு வந்துவிட்டால் என்ன?....'

நான் ஹோட்டலிலிருந்து சாப்பாட்டுத் தூக்குடன் சைக்கிளில் வந்து கொண்டிருந்த போது ரங்கநாதராவ் அவசரம் அவசரமாக எதிர்த் திசையில் — ராயப்பேட்டை ஆஸ்பத்திரி பக்கமாக — போய்க் கொண்டிருந்ததைப் பார்த்தேன். நின்று பேச எனக்குச் சந்தர்ப்பமில்லை; அவருக்கும் அவகாசமில்லை. கையை ஆட்டி விட்டுப் போய் விட்டார் ராவுஜி.

**மா**லை நாலு மணி இருக்கும். நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தவன் ஏதோ கூச்சல் சத்தம் கேட்டுக் கண் விழித்தேன். பக்கத்து வீட்டிலிருந்துதான் வந்து கொண்டிருந்தது.

''போய்த்தான் பாருங்களேன் என்னவென்று?'' என்ற இந்துவின் விரட்டலுக்கு அடிபணிந்து, துண்டைத் தோளில் போட்டுக் கொண்டு பக்கத்து வீட்டுக்குப் போனால் —

கூடத்தில் நாடாக் கட்டிலில் கிடக்கிறார் ராவுஜி, மயக்கமாக. பெண்டாட்டியும் குழந்தைகளும் கால்மாட்டிலும் தலைமாட்டிலுமாக உட்கார்ந்து கூச்சல் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைத் தவிர, புதிதாக இரண்டு பேரும் அங்கே இருந்தார்கள்.

விஷயம் என்னவென்று விசாரித்தேன். அந்தப் புதியவர்கள்தான் தகவல் சொன்னார்கள். ரேஸ் கோர்ஸிலிருந்து வருகிறார்களாம். மூன்றாவது 'ஈவன்ட்'டின் போது திடுமென்று ராவுஜி மயக்கம் போட்டுக் கீழே விழுந்து விட்டாராம். எப்பேர்ப்பட்ட நல்ல மனிதனும் வெறி பிடித்து நிற்கும் நேரம் அது. அந்தக் கும்பலில் இவரை யார் லட்சியம் செய்யப் போகிறார்கள்?.... இந்த இரண்டு பேரும்தான் 'ஐயோ பாவம்' என்று இரக்கப்பட்டு, முதலுதவி அளித்து, டாக்ஸியிலேயே வீட்டில் கொண்டு வந்து சேர்த்திருக்கிறார்கள்.

''பாவம், வயசானவரு.... வெயில் தாங்கல்லே.... அதான் மயக்கம் அடிச்சு விழுந்துட்டாரு....'' என்றார் அவர்களில் ஒருவர் உண்மையான அனுதாபத்துடன்.

''நல்ல வேளையாக நீங்கள் கொண்டு வந்து சேர்த்தீர்களே ! உங்களுக்கு எப்படி நன்றி சொல்வதென்றுதான் தெரியவில்லை'' என்றவன் அவர்களுக்கு ஆன செலவைத் தந்து விடுவதாகச் சொன்னேன். ஆனால் அவர்களோ, ''நல்லாயிருக்குங்க. மனுஷனுக்கு மனுஷன் இதுகூடச் செய்யலேன்னா அப்புறம் என்னாங்க ?'' என்று சொல்லிப் பெருந்தன்மையாக மறுத்து விட்டார்கள்.

அவர்கள் போன பிறகு, ராவுஜியின் குடும்பத்தாரை விலகியிருக்கச் சொல்லி, அவர் மீது குளிர்ந்த காற்று படும்படி செய்தேன். அப்போதுதான் கவனித்தேன். ராவுஜியின் ஆடைகள் தளர்த்தப்படாமலே இருந்தன.

அவருடைய சட்டைப் பொத்தான்களைக் கழற்றி விட்டேன். அவரிடமிருந்து வந்து கொண்டிருந்த பெருமூச்சினால் சட்டைப் பை பெரிதாக மேலும் கீழும் ஏறி இறங்கியது; அதற்குள் அப்படி என்னதான் திணித்து வைத்திருக்கிறார் என்று பையைக் காலி செய்து பார்த்தேன்.

ஒரு ரூபாய் எண்பது பைசா சில்லறை ; ஒரு சின்ன பாக்கெட் டயரி; கைக்குட்டை; ஒரு காகிதத்தில் யாரோ குறித்துக் கொடுத்த 'டிப்ஸ்'; இவற்றைத் தவிரப் பழுப்பு நிறக் காகிதம் ஒன்றும் இருந்தது.

அதை எடுத்துப் பிரித்துப் பார்த்தேன்; என் நெஞ்சில் கனல் மூண்டது.

அது ஒரு கடிதம். ராயப்பேட்டை ஆஸ்பத்திரிக்காரர்கள் 'சம்பந்தப்பட்டவர்களுக்கு' எழுதிக் கொடுத்த கடிதம். அதன் வாசகம்:

''திரு ரங்கநாதராவ் இன்று ரத்த தானம் அளித்திருப்பதால் அவருக்கு இன்று முழுவதும் பரிபூரண ஓய்வு கொடுக்கும்படி தாங்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்...''

ராவுஜியின் மனைவி அநசூயா கடக்கடக் காப்பி போட்டு எடுத்துக் கொண்டு வந்து தலைமாட்டிலே நின்றாள்.

ராவுஜிக்கு மேல்மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது.




கொரிப்பதற்குக் கொஞ்சம் கட்டுரையில் ''போடு ஸாவனீர்'' என்று பிரகரமாகி உள்ளது. ''ஸாவனிர்'' என்று உச்சரிக்க வேண்டும். ஸாவனீர் அல்ல! சிறுவர் விருந்து பகுதியில் விந்தையல்லவோ துணுக்கில் ''வேறு எந்த மொழியையும் (யானைகள்) புரிந்து கொள்வதில்லை'' என்று உள்ளது. இது சரியல்ல. கேரளத்தில் யானைக்கு மாவுத்தன் கட்டளையிடுவது மலையாள பாஷையில்தான்.

இராமநாதபுரம்
25—3—69 கே. எஸ். ஸ்ரீநிவாஸன்

கல்கி 9—3—69 தேதி இதழில் ''ஸபாஷ், குடந்தை மாணவர்கள்'' என்ற தலைப்பில் எழுதப் பெற்றிருந்ததைப் படித்து மகிழ்ச்சியடைந்தேன். எம் கல்லூரி மாணவர்களும் ஒரு பெரிய சமுதாயத் தொண்டைச் சென்ற இரு ஆண்டுகளாகச் செய்து வருகிறார்கள் என்பதை உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன்.

அம்மைத் தடுப்புத் திட்டத்தைத் தவிர வேறு எந்த நோய்த் தடுப்புத் திட்டத்தையும் இதுவரை அரசு இலவசமாகச் செயல் படுத்தவில்லை. திருவண்ணாமலை நகரில் ஒரு புதிய தடுப்பூசித் திட்டத்தைக் கல்லூரி மாணவர்களும், டாக்டர்களும் கடந்த இரு ஆண்டுகளாக நிறைவேற்றி வருகிறார்கள். அடுத்த ஆண்டிலும் இந்தத் திட்டம் அமுலில் இருந்தால், கக்குவான் இருமல், டிப்தீரியா, டெட்டனஸ் என்ற மூன்று நோய்களும் இவ்வூரிலிருந்து விரட்டியடிக்கப்படும். இவ்வூரில் உள்ள இருபது டாக்டர்களும் இதற்கு இலவசமாகத் தொண்டாற்றுகின்றனர்.

இவர்களுக்கும் இவர்களுடன் ஒத்துழைக்கும் மாணவர்களுக்கும் பகவானுடைய அருள் கிடைக்கும் என்று வாழ்த்துவதைவிட வேறு வழியில் கைம்மாறு செய்ய முடியாது.

திருவண்ணாமலை, டி. வி. சீனிவாசன்,
13—3—69 முதல்வர், அரசினர் கலைக் கல்லூரி.

திரு ஜெகசிற்பியன் அவர்கள் 'கிளிஞ்சல் கோபுரம்' கதையை அத்தியாயம் இருபத்திரண்டிலிருந்து ''சரிந்த கோபுர''மாக மாற்றிக் கொண்டு போகிறார். யானைக்கும் அடிசறுக்கும்தானே? கதாநாயகன் முத்துசிவனைக் கீழே சரியச் செய்தால்தானே கதையில் புதிய திருப்பம் ஏற்படும்? கதை எப்படி முடியுமோ என்று வாசகர்களின் ஆவலைத் தூண்டி விட்டிருக்கிறார் கதாசிரியர்.

கொழும்பு
26—3—69 பி.ஷேய்க் முஹைய்தீன்

'அணுவுக்குள் அகிலம்' என்ற கட்டுரையைப் படித்தேன். என்னைப் போன்ற இளைஞர்களுக்கு இது மிகவும் உபயோகமான விஷயம். பல ஆண்டுகளுக்கு முன் ராஜாஜிமண்டபத்தில் அணுவைப் பற்றி ஒரு புகைப்படக் காட்சி நடந்தது. அன்று ஒரு நாள் நான் என் நண்பரைப் பார்ப்பதற்காக ராஜாஜி மண்டபத்துக்கு விடியற்காலை ஏழரை மணிக்குப் போன போது ஒரு மனிதர் வராந்தாவில் ஒரு ஹோல்டால் மீது படுத்துக் கொண்டிருந்தார். என் காலடிச் சத்தம் கேட்டதுமே எழுந்து உட்கார்ந்து 'ஆப் கௌன் ஹை?' என்று ஹிந்தியில் கேட்டார். நான் விளக்கியதும் 'அச்சா அச்சா' என்று பேசாமல் இருந்து விட்டார். அவர்தான் டாக்டர் பாபா என்றோ, இந்தியாவின் மாபெரும் விஞ்ஞானி என்றோ எனக்கு அப்போது தெரியாது. பல மாதங்களுக்குப் பிறகு ஒரு பத்திரிகையில் அவர் படமும் கட்டுரையும் வந்த போதுதான் 'அடாடா! இவரா அந்த மனிதர்!' என்று எண்ணினேன். அன்று அவர் நினைத்திருந்தால் அரசாங்க விருந்தினர் விடுதியிலேயே தங்கியிருக்கலாம். ஆனால் அன்று கண்காட்சியில் இருந்த பொருள்களைப் பாதுகாப்புடன் வைத்திருக்க வேண்டி அவர் அங்கேயே ஒரு ஹோல்டால் மீது படுத்துக் கொண்டிருந்தார். இப்போது நினைத்தாலும் அவருடைய எளிமையான தோற்றம் என் கண்முன் நிற்கிறது.

சென்னை - 1
27—3—69 அப்துல் ஹாஜ்

மகாபாரதத்தை வெளியிட்டு வரும் ஆசிரியர் அவர்கள் 'ராஜாஜி அவர்கள் எழுதிய இராமாயணத்தையும் கல்கியில் தொடராக வெளியிட மாட்டார்களா?' என ஏங்கிக் கொண்டிருந்தேன். எனக்குப் புத்துணர்ச்சி ஊட்டும் வகையில், இராமாயணக் காவியத்தைத் தொடர் கட்டுரையாக வெளியிட அவர்கள் முன்வந்திருப்பது குறித்து மகிழ்ச்சியின் உச்சிக்கே செல்கிறேன். 30—3—69 இதழ் கல்கி, பல்வேறு புதிய அம்சங்களைக் கொண்டதாகவும், அதே சமயம் பல புதிய அம்சங்கள் சேர்க்கப்படுவதை அறிவிப்பதாகவும், அருமையாக அமைந்திருந்தது.

சென்னை — 6
28—3—69 எஸ். கலைவாணன்

ஜெகசிற்பியன் எழுத்து வாழ்க்கையின் உண்மையை வடித்துத் தரும் எழுத்து. ஜீவகீதத்தில் வந்த நச்சி பாத்திரத்துக்கு இணையாக ஒரு முத்துசிவனைக் கிளிஞ்சல் கோபுரத்தில் ஆசிரியர் சிருஷ்டித்திருக்கிறார். இந்த வாரம் வலம்புரியின் மரணம் என்னைக் கலக்கமுறச் செய்தது.

ஹைதராபாத்
8—4—69 லக்ஷ்மி

# மகாபாரதம்

ராஜாஜி

## 103. ராஜ்ய பாரம்

மனிதனுக்கு ஒரு பொருள் கிடைக்கும் வரையில் அதைப் பற்றி மோகம். தேடிய பொருள் கிட்டியதும் அதன் மேல் வைத்திருந்த ஆசை கரைந்து போய்ப் புதுத் துயரங்களும் சங்கடங்களும் மனிதனைப் பிடிக்கும். போர் புரிவதும் பகைவனைக் கொல்லுவதும் க்ஷத்திரிய தருமமாக இருந்தாலும், சகோதரர்களைக் கொன்று சம்பாதித்த பதவியும் செல்வமும் என்ன சுகத்தைத் தரும்? இதைத்தான் அருச்சுனன் கண்ணனிடம் யுத்தம் ஆரம்பிக்கும் தருவாயில் முறையிட்டது. அதற்குச் சமாதானமாகக் கண்ணன் தருமத்தைப் பற்றியும் கடமையைப் பற்றியும் உபதேசம் செய்தான். ஆயினும் அருச்சுனன் சொன்னதிலும் பெரிய உண்மை இல்லாமலில்லை.

பாண்டவர்கள் கௌரவர்களை ஜெயித்து விட்டு, சம்பூர்ண ராஜ்ய பதவி அடைந்தார்கள். பிறகு கடமையை உத்தேசித்து ராஜ்யபாரம் வகித்து நடத்தினார்கள். ஆனாலும் எதிர்பார்த்த சந்தோஷம் அடையவில்லை.

''வெற்றி பெற்று ராஜ்யாதிபத்யம் அடைந்த பாண்டவர்கள், திருதராஷ்டிரனை எவ்விதம் நடத்தினார்கள்?'' என்று ஜனமேஜயர் கேட்க வைசம்பாயனர் கதையைச் சொல்கிறார்:

துக்கசாகரத்தில் மூழ்கிய திருதராஷ்டிரனிடம் எல்லா விதத்திலும் கௌரவம் காட்டியே பாண்டவர்கள் ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள். எல்லாக் காரியங்களையும் திருதராஷ்டிரனிடம் தெரிவித்து அவனுடைய அனுமதி பெற்றே பாண்டவர்கள் யுதிஷ்டிரன் தலைமையில் ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள். பெற்ற நூறு மக்களையும் கனவில் பெற்ற தனத்தைப் போலவே இழந்த காந்தாரியைக் குந்தி தேவி மிகவும் அன்போடும் பக்தியோடும் பார்த்து வந்தாள். திரௌபதியானவள் அவர்கள் இருவரையும் சமமாகவே பாவித்துப் பணிவிடை செய்து விநயமாக நடந்து கொண்டாள்.

திருதராஷ்டிரனுடைய மாளிகையில் அவனுக்காகச் சிறந்த சயனாசனங்களையும் ஆடையாபரணங்களையும் யுதிஷ்டிரன் அமைத்தான். அவனுக்குப் பல விதமான பட்சணங்களையும் ஆகாரங்களையும் செய்து அனுப்பி வந்தான். கிருபாச்சாரியார், திருதராஷ்டிரனுடன் வசித்து வந்தார். வியாசர் அவனுக்கு ஆறுதல் கொடுக்கக் கூடிய கதைகளைச் சொல்லிக் கொண்டு வந்தார். அரசியல் விவகாரங்களை யுதிஷ்டிரன் திருதராஷ்டிரனை அவ்வப்போது கேட்டு அவனுடைய அனுமதியின் மேல் செய்வது போலவே செய்து வந்தான். ராஜாவான தருமபுத்திரன் திருதராஷ்டிரனுக்கு வருத்தம் உண்டாகக்கூடிய பேச்சு ஏதும் பேசாமல் ஜாக்கிரதையாக இருந்தான். பல தேசங்களிலிருந்து வரும் மன்னர்கள் கௌரவ சிரேஷ்டனான திருதராஷ்டிரனை முன்போல மகாராஜனாகவே உபசரித்தனர். ஸ்திரீகள் காந்தாரிக்குப் பணிவிடை செய்வதில் ஒரு குறையும் இல்லாமல் பார்த்து வந்தார்கள். யுதிஷ்டிரன் ''புத்திரர்களை இழந்த இவர் ஒரு சிறிதும் துயரப் படாமல் இருக்க வேண்டும்'' என்று தன் சகோதரர்களுக்கு உத்தரவிட்டிருந்தான். பீமனைத் தவிர மற்றவர்கள் அவ்வாறே செய்து வந்தனர். திருதராஷ்டிரன் பாண்டவர்களால் நன்கு பூஜிக்கப்பட்டுத் தன் புத்திரர்கள் ஜீவித்திருந்தால் எவ்வளவு சுகம் கிடைக்குமோ அவ்வளவு சுகத்தையும் போகங்களையும் அடைந்தான். திருதராஷ்டிரனும் பாண்டவர்களை அன்போடே பார்த்து வந்தான். அவர்களிடம் அப்பிரியம் காணவில்லை; காட்டவுமில்லை.

இவ்வாறு பாண்டவர்கள் திருதராஷ்டிரனை நன்றாகவே நடத்தி வந்தார்கள். ஆனால் பீமன் மட்டும் அப்பிரியமான காரியங்களைச் சில சமயம் செய்வான். சில நாட்கள் கழித்த பிறகு ரகசியமாக ஆட்களைக்கொண்டு திருதராஷ்டிரனுடைய கட்டளைகளை நடக்கவொட்டாமல் செய்ய ஆரம்பித்தான். 'மந்த புத்தியைப் படைத்த துரியோதனாதிகள் கொல்லப்பட்டனர்' என்று திருதராஷ்டிரன் காதில் விழும்படி சொல்வான். துரியோதனன், கர்ணன், துச்சாதனன் இவர்களுடைய செயலை எண்ணி எண்ணித் தன்

கோபத்தை மறக்கவோ அடக்கவோ அவனால் முடிய வில்லை. சில சமயம் திருதராஷ்டிரனுக்கும் காந்தாரிக் கும் கேட்கும்படியாகக்கூடக் கடுமையான வார்த்தை களைச் சொல்லுவான்.

பீமனுடைய வார்த்தைகளும் சில்லறைக் காரியங் களும் திருதராஷ்டிரன் மனத்தைக் குத்தும். இதைக் கண்டு காந்தாரியும் வருத்தப்பட்டாள். ஆனால் அவள் மகா விவேகசாலி. தர்மம் அறிந்தவள். பீமன் சொல் லும் அப்பிரிய வசனங்களைக் கேட்கும்போதெல்லாம் தருமமே வடிவம் கொண்டது போல் விளங்கும் குந்தி யைப் பார்த்து மனத்தில் சாந்தம் அடைவாள்.

இவ்வாறு பதினைந்து வருடங்கள் கடந்தன.

## 104. திருதராஷ்டிரன்

விருத்தனான திருதராஷ்டிரன் பீமனுடைய வார்த்தைகளால் பீடிக்கப்பட்டு யுதிஷ்டிரன் உத்தர வுப்படி அமைக்கப்பட்ட சுகங்களில் மனம் செலுத்த அவனால் முடியாமல் போயிற்று. பாண்டவர்களுக்குத் தெரியாமல் கடும் விரதங்களை அனுஷ்டித்தான். சாப் பாட்டைக் குறைத்தும் வேறு விதங்களிலும் உடலை வருத்திக்கொண்டு வந்தான். காந்தாரியும் அவ்விதமே செய்தாள். பிறகு ஒருநாள் தர்மபுத்திரரை அழைத்து அவனிடம் திருதராஷ்டிரன் இவ்வாறு சொன்னான்:

''பிள்ளாய்! உனக்கு க்ஷேமம் உண்டாகுக! நான் உன்னால் நன்கு பாலிக்கப்பட்டுச் சுகமாகப் பதினைந்து வருஷங்கள் உன் வீட்டில் வசித்தேன். தானங்களைக் கொடுத்தேன். சிராத்தத்தையும் செய்தேன். புத்திரர் களை இழந்த காந்தாரியும் மனத்தை ஸ்திரப்படுத்திக் கொண்டு தன் துக்கத்தை மறந்து என்னைக் கவனித்து வந்தாள். திரௌபதிக்குப் பெரிய அபகாரம் செய்தவர் களும் உன் பிதுரார்ஜிதத்தைக் கவர்ந்தவர்களுமான என்னுடைய கொடிய மக்கள் அவர்களுடைய அதர் மத்தினால் மாண்டார்கள். அவர்கள் யுத்தத்தில் புறங்காட்டாமல் கொல்லப்பட்டு வீர சுவர்க்கம் அடைந்திருக்கிறார்கள். நானும் காந்தாரியும் மறு மைக்கு வேண்டிய கடமைகளை இனிச் செய்துகொள்ள வேண்டும். உனக்கு சாஸ்திரம் தெரியுமே? கிழிந்த துணிகளும் மரப்பட்டைகளும் தரித்து நான் வனம் செல்ல வேண்டும். உனக்கு நலன் வேண்டிக் கொண்டு நான் வனத்தில் வசிக்க விரும்புகிறேன். இதற்கு நீ அனுமதி கொடுக்க வேண்டும். நம்முடைய குலத்தின் வழக்கத்தை நான் அனுசரிக்க வேண்டும். அரசனாகிய நீயும் என் தவத்தின் பயனில் ஒரு பகுதியை அடை வாய்'' என்றான்.

இதைக் கேட்ட யுதிஷ்டிரன், ''நீர் இவ்வாறு உபவாச மிருந்து தரையில் படுத்துத் தேகத்தை வருத்தி வந்ததை நானும் என் சகோதரர்களும் அறிய வில்லை. நீர் சுகமாக இருப்பதாகவே நான் வஞ்சிக்கப் பட்டேன். என்னுடைய பிதாவான நீர் ஆறாத துக் கத்தை அடைந்தீர். எனக்கு ராஜ்யத்தாலும் போகங் களாலும் என்ன பயன்? நான் மிகக் கெட்டவன். ஆகையினால் நான் தவறு செய்தேன். உன்னுடைய புத்திரன் யுயுத்ஸு ராஜாவாக இருக்கட்டும். அல்லது வேறு யாரை நீர் விரும்புகிறீரோ அவன் ராஜாவாக இருக்கட்டும். அல்லது நீரே ராஜாவாக இருந்து இந்தத் தேசத்தைப் பரிபாலனம் செய்யும். நான் வனம் செல்கிறேன். நான் இதுவரையில் அடைந்த அபகீர்த்தி போதும். நீர் மறுபடி யும் அபவாதத்தில் என் னைப் போட்டு எரிக்க வேண்டாம். நான் ராஜா அல்ல. நீர் அல்லவோ ராஜா. நான் எப்படி உமக்கு அனுமதி தர முடியும்? துரியோதனன் விஷயத்தில் இப்போது எனக்கு ஒரு கோபமு மில்லை. விதிவசத்தால் நாம் எல்லோரும் மதி மயக்கமடைந்து சம்ப வம் நடைபெற்று விட் டது. துரியோதனாதிக ளைப்போலவே நாங்களும் உமக்குப் புத்திரர்கள். காந்தாரியும் குந்தியும் இருவருமே எனக்குச் சமமான அன்னைகள். நீர் வனம் சென்றால் நான்



கூடவே வருவேன். நீர் காட்டுக்குப் போய்விட்டு உம்மைப் பிரிந்த எனக்கு இந்த அரச பதவி என்ன சுகம் உண்டு பண்ணும்? உம்மைத் தலைவணங்கிப் பிரார்த்திக்கிறேன். உம்முடைய மனத்திலுள்ள வருத்தம் விலக வேண்டும். நான் சந்தோஷமாக உமக்குப் பணிவிடை செய்து உள்ளத்தில் சாந்தி பெறுவேன்'' என்றான்.

திருதராஷ்டிரன், ''குந்தி நந்தனா! என்னுடைய மனமானது வனம் போய்த் தவம் செய்வதில் பற்றுக் கொண்டு விட்டது. நான் உன் வீட்டில் பல வருஷங்கள் வாசம் செய்தேன். நீயும் உன்னைச் சேர்ந்த எல்லோரும் எனக்கு நன்றாய்ப் பணிவிடை செய்தீர்கள். இப்போது எனக்கு வனம் செல்ல அனுமதி கொடுக்க வேண்டும்'' என்றான்.

இவ்வாறு திருதராஷ்டிரன், நடுங்கிக் கொண்டும், அஞ்சலி செய்துகொண்டும் நின்ற தர்மராஜனுக்குச் சொல்லி விட்டு, விதுரனையும் கிருபாசாரியாரையும் நோக்கி, ''நீங்கள் அரசனுக்குச் சமாதானம் சொல்லி எனக்கு அனுமதி பெற்றுத் தர வேண்டும். எனக்கு வாய் உலருகிறது. வயதாகி விட்டதல்லவா? அதிகமாகப் பேசின சிரமமாக இருக்க வேண்டும்'' என்று சொல்லிவிட்டுப் பிரக்ஞையற்றுக் காந்தாரியின் மேல் சாய்ந்தான். இதைப் பார்த்து யுதிஷ்டிரன் தாங்க முடியாத துக்கமடைந்தான். ''யானையின் பலத்தைப் படைத்த இவர், இரும்பினால் செய்யப்பட்ட பிரதிமையைப் பொடியாகச் செய்த இந்த வீரர் இவ்வாறு மனம் நொந்து உடல் வாடித் தோலும் எலும்புமாய் விட்டாரே? பிரக்ஞை



இழந்து காந்தாரி பேரில் அநாதை போல் சாய்ந்து விழுந்து கிடக்கிறாரே! இதற்கெல்லாம் காரணம் நானல்லவோ! தருமம் தெரியாதவனான என்னையும் என்னுடைய புத்தியையும் நான் கற்ற கல்வியையும் நிந்திக்க வேண்டும்'' என்று பரிதாபப்பட்டான்.

ஜலத்தை எடுத்துத் தெளித்துத் தன் குளிர்ந்த கையினால் திருதராஷ்டிரனுடைய முகத்தைத் தடவினான். திருதராஷ்டிரனுக்கு நினைவு வந்ததும் கையினால் தன்னைத் தடவிக் கொண்டிருந்த பாண்டவனைக் கட்டி அணைத்துக் கொண்டு ''அப்பனே! உன்னுடைய ஸ்பரிசம் அமிர்தம் போல் இன்பம் தருகிறது'' என்றான்.

அச்சமயத்தில் வியாசர் வந்தார். விஷயம் தெரிந்ததும் அவர் யுதிஷ்டிரனுக்குச் சொன்னார்:

''குருகுல சிரேஷ்டன் திருதராஷ்டிரன் எவ்விதம் சொல்கிறானோ அவ்விதம் செய். முதுமை அடைந்தவனும் புத்திரர்களை இழந்தவனுமான இவன் நீண்ட காலம் இந்தக் கஷ்டத்தைச் சகிக்க மாட்டான். சிறந்த ஞானம் பெற்றவளான காந்தாரி தன் சோகத்தை மிகத் தைரியமாகப் பொறுத்து வருகிறாள். என்னுடைய வார்த்தையைக் கேள். திருதராஷ்டிரனுக்கு அனுமதி கொடு. இவன் வனத்தில் தேன் மலர்களின் வாசனைகளுக்கிடையில் கவலையற்று இருக்கட்டும். பழைய ராஜ ரிஷிகளின் மார்க்கத்தைப் பின்தொடர்ந்து செல்லட்டும். ராஜாக்களுக்கு இதுதான் தர்மம். யுத்தத்தில் உயிரிழக்க வேண்டும். அல்லது வனத்தில் விதிப்படி ஆயுளை முடித்துக் கொள்ள வேண்டும். இவன் யாகங்களைச் செய்தான். பூமியை அனுபவித்தான். நீங்கள் காடு சென்றிருந்த பொழுது புத்திரனுடைய ஆதீனத்திலிருந்த விசாலமான ராஜ்யத்தைப் பதின்மூன்று வருஷங்கள் அனுபவித்தான். பலவிதமான தானங்களைச் செய்தான். நீயும் இந்தப் பதினைந்து வருஷ காலம் இவனை நன்றாகவே ஆராதித்து வந்தாய். ஒரு குறையுமில்லை. இப்போது இவனுக்குத் தவம் புரியும் சமயம். இவன் கோபத்தினால் போகவில்லை. நீ அனுமதித்து அனுப்பு'' என்று யுதிஷ்டிரனைச் சமாதானப்படுத்தினார்.

'அப்படியே ஆகட்டும்' என்று தருமராஜன் சொல்லிய பின் வியாசர் தம் ஆசிரமத்துக்குத் திரும்பிச் சென்றார்.

# 105. மூவர்களின் முடிவு

**வ**னம் போவதற்கு யுதிஷ்டிரனுடைய அனுமதி பெற்றதும் திருதராஷ்டிரனும் காந்தாரியும் தங்களுடைய மாளிகைக்குச் சென்று உபவாசம் தீர்த்துக் கொண்டார்கள். காந்தாரியும் குந்தியும் சேர்ந்தாற்போல் உட்கார்ந்து போஜனம் செய்தார்கள். திருதராஷ்டிரன் தன் பக்கத்தில் யுதிஷ்டிரனை உட்கார வைத்து ஆசிமொழிகள் சொன்னான். அதன் மேல் காந்தாரியின் தோளின் பேரில் கை வைத்து ஊன்றிக் கொண்டு கிழவன் வனத்துக்குப் புறப்பட்டான். புருஷனுக்குக் கண்ணில்லை என்று தானும் தன் முகத்தைத் துணியால் கட்டிக் கொண்டு கண்களை உபயோகப்படுத்தாமல் விரத வாழ்க்கை நடத்தி வந்த காந்தாரி, குந்தியின் தோளின் மேல் தன் கையை வைத்துக் கொண்டு நடந்தாள். மூவரும் ராஜதானியை விட்டு வனம் சென்றார்கள்.

காந்தாரிக்கு சிசுருஷை செய்யத் தானும் வனத்திலே இருப்பதாகக் குந்தி தன் மனத்தில் நிச்சயித்துக் கொண்டு சென்றாள். போகும்போது யுதிஷ்டிரனிடம் சொன்னாள்: ''மகனே! சகதேவன் மீது ஒருபோதும் கோபித்துக்கொள்ளாதே! யுத்தத்தில் வீர மரணம் அடைந்த கர்ணனை எப்போதும் அன்புடன் நினைப்பாயாக. அவன் என் மகன். உங்கள் சகோதரன் என்பதை நான் உங்களுக்குச் சொல்லாமல் போனது என் குற்றம். திரௌபதியைப் பிரியமாகப் பார்த்துக்கொள்ளுங்கள். பீமனும் அருச்சுனனும் நகுலனும் சகதேவனும் ஒருபோதும் துக்கப்படாமல் பார்த்துக் கொள். குலத்தின் பாரம் இனி உன்னுடையது'' என்றாள்.

காந்தாரியை வழி அனுப்பத்தான் குந்தி சென்றாள் என்று அதுவரையில் எண்ணிக் கொண்டிருந்த தருமபுத்திரன், இதைக் கேட்டதும் ஒரு முகூர்த்த நேரம் ஒன்றும் சொல்லத் தோன்றாமல் திகைத்தான். பிறகு, ''அன்னையே! இது வேண்டாம். எங்களை ஆசிர்வதித்து யுத்தத்துக்கு அனுப்பினாய். இப்போது எங்களை விட்டு விட்டு நீ வனம் போவது தருமம் அல்ல'' என்று யுதிஷ்டிரன் தாயை வருந்திக் கேட்டுக் கொண்டான். ஆனால் குந்தி வனம் செல்வதாக நிச்சயித்து விட்டு உறுதியாக நின்றாள்.

(அடுத்த இதழில் முடியும்)

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# நெஸ்கா:.பே

## சுவையே சொல்லும்:

1 அது உயர்ந்த தென்னிந்திய காபிக் கொட்டையினால் தயாரிக்கப்படும் 100% தூய காபி

2 அது இன்ஸ்டன்ட் காபி தயாரிப்பதில் உலகிலேயே அதிக அனுபவம் உடையவர்களால் தயாரிக்கப்படுகிறது.

3 அது நீங்கள் விரும்புமளவுக்கு ஸ்டிராங்காக இருக்கிறது.

சிறிதளவு சம அளவு குவியலாக

**அது சிக்கனமானதும் கூட**

தேவையான அளவே உபயோகியுங்கள்
அதில் வீணாகப்போவது எதுவுமில்லை






**NESCAFÉ***

நெஸ்லே தயாரிப்பு

**தனிச்சிறப்புள்ள தரமான காபி**

நெஸ்கா:.பே என்பது நெஸ்லேயின் இன்ஸ்டன்ட
காபியைக் குறிக்கும் ரெஜிஸ்டார்ட் டிரேட் மார்க்காகும்.

NCE 1066 TAM-A1

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon